

# கொலம்பியா வெளியீடு!

# ஹரிதாஸ்

## டாக்கி பாட்டுகள்

## M. K. தியாகராஜ பாகவதர்

GE. 6201 { கிருஷ்ணா முகுந்தா....
அன்னையும் தந்தையும்

GE. 6202 { மன்மத லீலையை.....
என் உடல்.........



**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மவுண்ட் ரோட், மதராஸ்.**

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

முகமத் இப்ராஹிம் & கம்பெனி, சென்னை. S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி. வெஸ்டர்ன் டிரேடிங் கம்பெனி, மதுரை. V. S. ராஜகோபாலன் & கம்பெனி, மதராஸ், பங்களூர், கோயமுத்தூர், சேலம். ஸௌத் இந்தியா மியூஸிக் எம்போரியம், சென்னை. M. A. இருதயஸ்வாமி & கம்பெனி, உதகமண்டலம். T. N. ராஜகோபால், கூனூர்.



# அது ருசிகரமாகவும், திருப்தி அளிக்கக்கூடியதாகவுமிருக்க வேண்டியது... ஆனால் அது ஊக்கத்தை அளிக்கவும் வேண்டும்!









நீங்கள் உங்கள் குடும்பத்திற்கு சமையல் செய்யும்பொழுது எப்பொழுதாவது இதைப் பற்றி யோசிப்பதுண்டா? உணவிற்கு சுவை மாத்திரமிருந்தால் போதாது— அதை உண்பவருக்கு ஊக்கத்தையும் கொடுக்கக்கூடியதாயிருக்கவேண்டும். சில உணவுகள் மற்றவைகளைவிட ஊக்கமளிக்கக் கூடியவை. நாம் வழக்கமாக உட்கொள்ளும் பல ஆகாரங்கள் ஊக்கத்தையளிக்கக் கூடியவைகளல்ல. அவை நம் ஆரோக்கியத்திற்கு உகந்ததல்ல. உண்மையில் அவைகள் முக்கியமாக குழந்தைகளுக்கு கெடுதல் செய்யவும் கூடும். ஆனால் ஆகாரங்களை ஊக்கமுள்ளவையாகச் செய்வது கடினமில்லை. வைடமின் நிறைந்த டால்டாவினால் சமையல் செய்வது ஒரு வழி. டால்டா இயற்கையாய் ஊக்கமளிக்கக் கூடிய சில முக்கிய வஸ்துக்களை அளிக்கிறது. மேலும் டால்டாவைக் காட்டிலும் உணவுகளுக்கு ருசி அளிக்கும் வஸ்து வேறு கிடையாது. நீங்கள் உபயோகித்துப் பாருங்கள்.

நம்மொவ்வொருவரும் நிச்சயம் எந்தெந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக் புக்" (ஆங்கிலத்தில் மட்டும் எழுதியுள்ளது) உணவுப் பொருள்களின் தாராதாரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப் பற்றியும் விவரித்திருக்கிறது. உங்களிடம் ஒரு பிரதி இருக்கவேண்டியது அவசியம். Dept. A133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.

**வைடமின் நிறைந்த டால்டா ஊக்கமளிக்கிறது.**

HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

# கல்கி பொருளடக்கம்

மலர் 4 }
இதழ் 22 }

1945 ஜனவரி 7

{ தாரண ௵
{ மார்கழி 24





தமிழ் மக்களைக் குதூகலத்திலும் பெருமையிலும் ஆழ்த்தக் கூடியதான புது வருஷச் செய்தி சென்ற வாரத்தில் வடநாட்டிலிருந்து வந்தது. "காந்தி மகான் தமிழ் படிக்கிறார்; அதிலும், பாரதியின் தமிழை — பாப்பா பாட்டைப் — படிக்கிறார்" என்பதுதான் அந்தச் செய்தி.

பாரதியார் தமிழ் மக்களுக்கு அளித்துவிட்டுப் போன தாரக மந்திரம் "தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற - தாயென்று கும்பிடடி பாப்பா!" என்பதுதான். அதையே நமது பத்திரிகையின் மூல மந்திரமாகக் கொண்டிருக்கிறோம்.




பாரதியார் தமிழைப் பாடினார்; தமிழ் நாட்டைப் பாடினார்; தமிழ் மக்களைப் பாடினார். தமிழர் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சமும் மேன்மையுறப் பாடினார்.

பாரதியார் தெய்வத்தைப் பாடினார்; தேசத்தைப் பாடினார்; தேசபக்தர்களைப் பாடினார்; தேசத்தின் மகா புருஷர்களைப் பாடினார்.

பாரதியார் தாய் நாட்டின் விடுதலைக்காகப் பாடினார்; சமூக விடுதலைக்காகப் பாடினார்; பெண் விடுதலைக்காகப் பாடினார்; "பறையருக்கும் தீயருக்கும் புலையருக்கும் விடுதலை!" என்று பறை யறைந்து பாடினார்.

மனித சமூகத்துக்காகப் பாடினார்; மனிதர்கள் அமர வாழ்வு அடையுமாறு பாடினார்.

"சாகா வரம் அருள்வாய்!" என்றும், "காலனைக் காலால் உதைப்பேன்" என்றும் பாடிய கவி வாக்குப் பொய்த்துப் போகவில்லை. பாரதியார் சாகா வரம் பெற்று விட்டார்; அமர வாழ்வு அடைந்து விட்டார். தமிழ் மக்களின் இருதய மாளிகையில் அவர் என்றென்றும் நிலைத்து வீற்றிருப்பார்.

கம்பனுக்குப் பிறகு தமிழ் நாட்டில் உதித்த அமரகவி பாரதியார். அவருடைய திருவுருவத்தை நமது இந்தப் புது வருஷ இதழின் அட்டையில் பெருமையுடன் வெளியிடுகிறோம்.




மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 22

# என்ன சேதி?

## வரவேற்கிறோம்

ஒரு காரணமும் இன்றிச் சிறையில் கிடந்து வாடிய தேசபக்தர்கள் பலர் சென்ற ஆண்டின் இறுதியில் விடுதலை செய்யப்பட்டார்கள். அவர்களுக்கு மனமார்ந்த நல்வரவு கூறுகிறோம். அவர்களைப் போலவே அகாரணமாகச் சிறையில் வைக்கப்பட்டுள்ள தேசபக்தர்கள் இன்னும் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கும் சிறைக்கதவு திறக்கப்படும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

## பிரார்த்திக்கிறோம்

நாற்பது கோடி மக்கள் வாழும் இந்தப் பாரத பூமியை ஆளும் பொறுப்பைத் தளபதி வேவல் பெயரளவில் வகித்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு உதவியாக நிர்வாக சபை அங்கத்தினர் சிலரும் அலங்காரமாக வீற்றிருக்கிறார்கள். ஆனால் உண்மையில், திறமைசாலிகளான சில ஐ. ஸி. எஸ். காரர்கள் தான் — ஆங்கிலேயரும் இந்தியருமாகச் சேர்ந்து — தேச நிர்வாகம் செய்யும் பெரிய பாரத்தைத் தாங்கி வருகிறார்கள். நாளுக்கு நாள் இந்த பாரம் அதிகமாகியும் வருகிறது. சிறையிலுள்ள நமது அரும் பெரும் தலைவர்களான ஜவாஹர்லால்ஜி, ராஜேந்திர பிரஸாத், வல்லபாய் முதலியவர்கள் வெளியில் வந்து, இராஜ்ய பாரத்தை ஐ. ஸி. எஸ். காரர்களின் தோள்களிலிருந்து இறக்கித் தாங்கள் ஏற்றுக் கொள்ளும் நாள் கூடிய சீக்கிரத்தில் வரவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

## ஆதரிக்கிறோம்

டில்லி பெரிய சட்டசபையில் காலியாகியிருக்கும் ஒரு ஸ்தானத்துக்குச் சென்னை மாகாணம் முழுவதிலுமுள்ள கௌன்சில் ஆப் ஸ்டேட் வோட்டர்கள் சேர்ந்து ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த ஸ்தானத்துக்கு நமது ஆந்திர சகோதரர் ஸ்ரீ எம். திருமல்ராவ் நிற்பதை முழு மனதுடன் நாம் ஆதரிக்கிறோம். ஸ்ரீ திருமல் ராவ் ஆந்திர நாட்டின் சிறந்த தேசபக்தர்களில் ஒருவர்; பிரபல காங்கிரஸ் வாதி; சிறை சென்ற தியாகி; நல்ல அறிவாளி. சட்ட சபையில் ஜனங்களின் கட்சியை எடுத்துச் சொல்வதற்கு அவரைக் காட்டிலும் சிறந்த பிரதிநிதியைக் கண்டு பிடிக்க முடியாது. தமிழ் நாட்டிலுள்ள வோட்டர்கள் ஸ்ரீ எம். திருமல் ராவுக்கே தங்கள் வோட்டுக்களைக் கொடுக்க வேண்டுமென்று பெரிதும் கேட்டுக் கொள்கிறோம்.

## ஆசி கூறுகிறோம்

தமிழ் நாட்டில் தோன்றியிருக்கும் இலக்கிய மறுமலர்ச்சியின் சின்னங்களாகப் பல கையெழுத்துப் பத்திரிகைகள் ஏற்பட்டிருக்கின்றன. இந்தக் கையெழுத்துப் பத்திரிகைக்காரர்கள் "நாடோடி"யின் தலைமையில் ஒரு சங்கம் ஏற்படுத்திக் கொண்டிருப்பது அறிந்து மகிழ்கிறோம். மேற்படி சங்கம் வளர்ந்தோங்கித் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் நல்ல இலக்கியத் தொண்டு செய்யுமாறு ஆசி கூறுகிறோம்.

---

**ஐந்து ரூபாய் பரிசு:** *சென்ற இதழில் வெளியான "வருந்தும் காரணம்" என்னும் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: அ. இராமமூர்த்தி, போர்டு ஹைஸ்கூல், விருத்தாசலம்.*

# புது வருஷ ஊகங்கள்

யுத்த அரக்கனும் சமாதான தேவியும் புது வருஷக் குழந்தைக்குப் போட்டியிடுவார்கள்.

மூன்று பலவான்கள் மூன்று பக்கம் இழுக்கும்போது சின்னஞ்சிறு குழந்தை நடுங்காமல் என்ன செய்யும்?



—உம்மன்

உலகத்தை ரக்ஷிப்பதற்குரிய வழியைப்பற்றி மூன்று பெரிய மனிதர்கள் மூன்று விதமாகக் கனவு காண்கிறார்கள்.

வருஷா வருஷம் தேய்ந்து கொண்டு வந்த நேசநாடுகளின் உன்னத யுத்த லட்சியங்கள் 1945-ல் அடியோடு மறைந்துவிடக் கூடும்.

1939-ல் யுத்த லட்சியம்

1940-ல் யுத்த லட்சியம்

1941-ல் யுத்த லட்சியம்

1942-ல் யுத்த லட்சியம்

1943-ல் யுத்த லட்சியம்

1944-ல் யுத்த லட்சியம்

1945-ல் யுத்த லட்சியம்

?

# உலகம் உருப்படுமா?

இது என்ன உலகம்!

சுத்த உபயோகமற்ற உலகம்!

வெறும் மண்ணுலகம்!

இதற்காகப் படுகிற பாடெல்லாம் வீண்தான்!

இந்த மண்ணுலகத்தின் இயல்பை நன்கு அறிந்துதான் நமது பெரியோர்கள் "மண்ணாசை" உதவாதென்று சொன்னார்கள்.

"மண்ணுலகத்தை நம்பி மோசம் போக வேண்டாம்; பரலோகத்துக்கு வழி தேடிக் கொள்ளுங்கள்!" என்றும் சொன்னார்கள்.

ஆஹா! சென்ற 1944-ம் வருஷத்தில் இந்த உலகத்தை உருப்படச் செய்வதற்காக மேனாட்டு இராஜ தந்திரிகளும் இராணுவ தந்திரிகளும் என்ன வெல்லாம் பாடு பட்டார்கள்?

எத்தனை லட்சோப லட்சம் குண்டுகளைப் பொழிந்தார்கள்? எத்தனை ராட்சத ஆகாச விமானங்கள் எத்தனை தடவை பறந்து போய்க் குண்டு மாரி பொழிந்துவிட்டு வந்தன?

எத்தனை ராட்சத டாங்கிகள் எவ்வளவு கோரமான அக்கினி மழையைக் கக்கின!

எத்தனை வீடு வாசல்கள் அழிந்து நிர்மூலமாயின!

எத்தனை நாடு நகரங்கள் நாசமாயின!

எத்தனை 'வி 1' குண்டுகளும் 'வி 2' குண்டுகளும் உலகத்தை உருப்படச் செய்வதற்காக மின்னல் வேகத்தில் சென்று விழுந்தன!

இராஜ தந்திரிகள் எவ்வளவு பேர் நாட்டுக்கு நாடு பறந்து சென்றார்கள்? மகாநாடுகள் கூடினார்கள்?

இராணுவ தந்திரிகள் எவ்வளவு பேர் ஆகாச விமானத்தில் பறந்தார்கள்? உயிரையும் கொடுத்தார்கள்?

இப்படியெல்லாம் செய்தும் 1944-ல் உருப்படாத இந்த உலகம், 1945-ல் மட்டும் என்னத்தை உருப்பட்டு விடப் போகிறது? இப்படிப்பட்ட உருப்படா உலகத்தைக் கட்டிக்கொண்டு மாரடிப்பதில் நான் என்ன பிரயோஜனம்?

நமது அன்பார்ந்த மாஜி பிரதம மந்திரி — லேட் சர்ச்சில் துரை — எப்படியும் புத்திசாலிதான்! அவர் செய்தது தான் சரி! இந்த உருப்படாத உலகம் எப்படியாவது சந்தியில் நிற்கட்டும் என்று அந்த மகா மேதாவி * * *

"சந்தோஷமான புது வருஷம்!" என்று குரல் கேட்டதும் நிமிர்ந்து பார்த்தோம். சாக்ஷாத் சர்ச்சில் துரை எதிரே அமர்ந்திருந்தார்.

நமது உள்ளக் கிளர்ச்சியை ஒருவாறு வெளிக்குத் தெரியாமல் அடக்கிக் கொண்டு, "உங்களுக்கு நூறு ஆயுஸ்!" என்றோம்.

"எதற்காக?" என்றார் சர்ச்சில்.

"இந்த உலகத்தை உருப்படச் செய்வதற்காகத்தான்!" என்றோம்.

"அதைப் பற்றித்தான் அவ்வளவு முகக் கவலையுடன் எழுதிக் கொண்டிருந்தீரா?" என்று கேட்டார்.

"ஆம்" என்றோம்.

"நான் ஒருவன் இருக்கும்போது அதைப்பற்றி நீர் கவலைப்பட வேண்டிய காரணம் என்ன?" என்று கேட்டார்.

"ஒன்றுமில்லை; பூனைக்கு ஒன்பது உயிர் என்பது போல......"

"யார்? என்னையா பூனை என்கிறீர்?"

"இல்லவே இல்லை; ஒன்பது உயிர் உள்ள பூனையைப்போலத் தங்களுக்கும் உயிர்......"

"ஓஹோ! அமெரிக்கப் பத்திரிகைகளில் வந்த என்னுடைய மரணச் செய்தியைப் பற்றிச் சொல்கிறீராக்கும்! நானும் பார்த்தாலும் பார்த்தேன். அமெரிக்கப் பத்திரிகைக்காரர்களைப் போன்ற அண்டப் புளுகர்களைப் பார்த்ததில்லை."

"எல்லாம் அவ்வீட்டில் கற்ற வித்தைதானே?"

"குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்களாய்ப் போய்விட்டார்கள். போனால் போகட்டும். இப்போது நான் உயிரோடிருக்கிற விஷயம் தெரிந்து போய்விட்டபடியால் இனிமேல் உலகம் உருப்படுமா என்ற கவலை உமக்குக் கிடையாதே!"

"கவலை அவ்வளவாக இல்லை. இருந்த போதிலும்,......"

"ஏன் மென்று விழுங்குகிறீர்?"

"உலகத்தை உருப்படச் செய்வதற்கு நீங்கள் ஒருவர் மட்டும் இருந்தால் தேவலை. உங்களுடன் போட்டி போடுவதற்கு இன்னும் மூன்று பேர் இருக்கிறார்களே என்றுதான், கொஞ்சம் கவலையாயிருக்கிறது."

"யார்யாரைச் சொல்லுகிறீர்?"

"முதலிலே அந்த ராட்சஸ ஹிட்லர் இருக்கிறார். உலகத்தை உருப்பட வைத்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன் என்கிறார். இதற்காக உலகத்திலுள்ள யூதர்கள், கம்யூனிஸ்டுகள் எல்லாரையும் சம்ஹாரம் செய்து அவர்களுடைய இரத்தத்தைக் குடிப்பேன் என்கிறார்!......"

"அவன் கிடக்கிறான். அந்த நாஸி மிருகம்! சுருட்டும் சாராயமும் குடிக்கத் தெரியாத நீசன்! இவன் என்ன உலகத்தை உருப்பட வைப்பது? இவன் யார் உலகத்தைக் கம்யூனிஸ்டு அபாயத்திலிருந்து காப்பதற்கு? இராணுவ தந்திரம் இன்னதென்று அறியாத நிர்மூடன்......"

"துரைவாள்! அப்படிச் சொல்ல முடியாது போலிருக்கிறதே! சென்ற வருஷக் கடைசியில் ஹிட்லரின் இராணுவ தந்திரம் கொஞ்சம் பிரசித்தியடைந்திருக்கிறதே!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. மேற்கு அரங்கத்தில் ரன்ஸ்டெட் தாக்குதலைப் பற்றித் தானே சொல்கிறீர்? அதில் ராணுவ தந்திரம் ஒன்றுமில்லை; வெறும் டாங்கிகளின் பலந்தான்!"

"அப்படியா? அதனால் பயம் ஒன்றுமில்லையே?"

"வாஸ்தவத்தில் பயம் ஒன்றும் கிடையாது. ஆனால், கொஞ்சம் பயமுறுத்தல் உண்டு. அதுவும் ஒரு விதத்தில் நல்லதுதான்."

"நல்லதா? எப்படி?"

"ஏதோ யுத்தத்தில் ஜயித்து விட்டது மாதிரி நினைத்துக் கொண்டு இந்த அமெரிக்கர்கள் கன்னாபின்னா வென்று என்னைத் தாக்க ஆரம்பித்து விட்டார்கள் அல்லவா? அவர்களுக்கெல்லாம் கொஞ்சம் புத்தி வரும்."

"அமெரிக்கர்களுக்கு மட்டுந்தானா? பிரிட்டனிலேயே சிலருக்குக் கொஞ்சம் புத்தி வரவேண்டும் போலிருக்கிறதே! கிரீஸ் விஷயத்தில் உங்களை என்ன பாடு படுத்தி விட்டார்கள்!"

"அது ஒன்றும் பாதகமில்லை. பிரிட்டிஷ் ஜனநாயகத்தின் பெருமையே அதுதான். எதிர்க் கட்சியைச் சொல்ல எங்கள் நாட்டில் பூரண உரிமை உண்டு. செய்த பிசகைத் திருத்திக் கொள்வது அதனால் சாத்தியமாகிறது. நான்கூட கிரீஸுக்கு ஓடிச் சென்று ஒரு மாதிரி விஷயத்தைப் பைசல் செய்ய முடிந்ததல்லவா?"

"ஓஹோ! இப்போது தெரிகிறது! ஜனநாயகம் உங்களுக்கு அவ்வளவு பிடித்திருப்பதினால்தான் அதை மற்றவர்களுக்குக் கொடுக்காமல் நீங்களே வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறீர்கள் போலிருக்கிறது. உதாரணமாக, இந்தியா விஷயத்தில்......"

"இந்தியா இருக்கட்டும்; உலகத்தைப் பற்றிப் பேசுவோம்."

"சரி; அப்படியானால் உலகத்தை உருப்படச் செய்வதில் ஹிட்லரின் போட்டி பயம் கிடையாதல்லவா?"

"கிடையாது."

"ரூஸ்வெல்ட்டின் விஷயம் என்ன?"

"ஆ! ரூஸ்வெல்ட்டும் அமெரிக்கர்களும் நிறையப் பேசுவார்கள்; அவ்வளவுதான். அவர்களால் ஒரு இடைஞ்சலும் ஏற்படாது. யுத்தம் ஒருவாறு முடிந்ததும், அமெரிக்கர்கள் ஆமையைப்போல் தலையை உள்ளே இழுத்துக் கொள்வார்கள்."

"அப்படியானால், அமெரிக்கரின் போட்டியும் கிடையாது. ஸ்டாலினைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?"

"என் அன்பார்ந்த தோழர் ஸ்டாலினைப் பற்றி என்ன கேட்கிறீர்?"

"அவர் சொல்கிறது, செய்கிறது எல்லாம்......"

"அவர் என்ன சொன்னாலும், என்ன செய்தாலும் அதெல்லாம் சரிதான்!"

"போலந்து விஷயம் எப்படி? லப்ளின் கமிட்டி இப்போது லப்ளின் கவர்ன்மெண்டாகி விட்டதே? லண்டனில் உள்ள போலிஷ் கவர்ன்மெண்டு பட்ட கடன்களைக் கூடத் தர முடியாது என்று அந்த மோசக்காரர்கள் சொல்லி விட்டார்களே?"

"சொன்னால் என்ன?"

"ஹங்கேரியில் பெரிய ஜமீன் நிலங்களையெல்லாம் குடியானவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கிறார்களாமே?"

"அதனால் என்ன?"

"ருமேனியாவிலிருந்து எண்ணெய் எடுக்கும் இயந்திரங்களைக் கொண்டு போய்விட்டார்களாமே!"

(14-ம் பக்கம் பார்க்கவும்)



# ஆடல் பாடல்



கர்நாடகம்

தமிழ் இசை இயக்கத்தைப் பற்றி எனக்குக் கவலை வந்து விட்டது. சென்ற சில வருஷ காலமாக அந்த இயக்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்ததுபோல் இனிமேலும் ஓங்கி வளருமா என்பது பற்றி ஐயப்பாடு தோன்றி விட்டது.

ஒரு நல்ல இயக்கத்தின் வளர்ச்சிக்கு வேகம் கொடுப்பது, அதற்கு ஏற்படும் எதிர்ப்புக்கள்தான். தமிழிசை இயக்கத்திற்கு எதிர்ப்பு இப்படி விழுந்து போய் விட்டதே, இனிமேல் அதற்கு எந்த முறையில் பலம் கொடுப்பது என்று யோசனையாகத்தான் இருக்கிறது.

சென்ற மூன்று வருஷமாக, டிசம்பர் கடைசியில் நடைபெறும் மியூஸிக் அகாடமி மகா நாடுகளில், தமிழிசை இயக்கத்தைக் கண்டித்துக் காரசாரமான பிரசங்கங்கள் செய்யப்படுவது வழக்கமாயிருந்தது. "தமிழ், சங்கீதத்துக்கு இசைந்த பாஷை இல்லை", "தமிழ்ப் பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதம் தொலைந்து போய் விடும்", "தமிழிலே நல்ல சாஹித்யங்கள் இல்லை", "தமிழ்ப் பாட்டுக்கள் கச்சேரிக்கு லாயக்கானவை இல்லை", "சங்கீதத்தில் பாஷைப் பிரச்னையைப் புகுத்தக் கூடாது" என்பது போன்ற அபத்தங்கள் சரமாரியாகப் பொழியப்பட்டன. கண்டனத் தீர்மானங்களும் செய்யப்பட்டன.

ஆனால் இந்த வருஷத்தில் எப்பேர்ப்பட்ட மாறுதல்? 22உ மியூஸிக் அகாடமி திறப்பு விழாவில் செய்யப்பட்ட பிரசங்கங்களை 23உ தமிழிசை மகாநாட்டில் பேசிய ஸர் ஆர். கே. ஷண்முகம் ஆமோதித்து, "இந்த வருஷத்து அகாடமி பேச்சுக்களை ஒப்புக் கொள்வதில் எங்களுக்கு ஒரு ஆட்சேபமும் இல்லை!" என்று கூறினார்!!

இப்படியாக இரண்டு மகாநாடுகளிலும் ஒரே ராகம், கொஞ்சம் 'சுருதி பேத' வேலைப்பாடுகளுடன், இந்த வருஷத்துத் திறப்பு விழாக்களில் பாடப்பட்டன.

இந்த வருஷத்துச் சங்கீத விழாப் பிரசங்கங்களில் ஸ்ரீ அழகப்பச் செட்டியாரின் பிரசங்கம் தலை சிறந்தது. அதில் ஒவ்வொரு வாக்கியமும் ஒவ்வொரு வரியும் படித்து அனுபவிக்க வேண்டியவை. ஆயினும், அதில் ஒரு முக்கிய அம்சத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

சங்கீதம் முதலிய கலைகளில் சம்பிரதாயம் மிகவும் முக்கியமானது என்பதை ஸ்ரீ அழகப்பச் செட்டியார் நன்கு வற்புறுத்தியிருக்கிறார். உண்மையான சங்கீத ரஸிகர்கள் — முக்கியமாக தமிழிசை இயக்கத்து ரஸிகர்கள் அனைவரும் — இதை ஒப்புக் கொள்வார்கள்.

"சம்பிரதாயம்" என்றால், "பழமையான வழக்கு" என்று பொருள்.

சங்கீதத்தில் பழமையான வழக்கையே பின்பற்றுவதுதான் தமிழிசை இயக்கத்தின் அடிப்படையான நோக்கம்.

இப்போதைய பிரபல சங்கீத வித்வான்கள் கையாளும் தெலுங்கு, ஸம்ஸ்கிருத கீர்த்தனங்கள் நூறு வருஷத்துக்கு உட்பட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தவை.

தமிழிசைக்காரர்கள் கைப்பற்ற விரும்பும் சம்பிரதாயமோ ஆயிரம் வருஷத்துக்கு முற்பட்ட சம்பிரதாயம்.

தியாகையர், தீக்ஷிதர் ஆகியவர்கள் நூறு வருஷத்துக்கு உட்பட்ட ஸாஹித்ய கர்த்தாக்கள். இவர்களுக்கு வெகு காலத்து முன்னால் முத்துத் தாண்டவர், அருணாசலக் கவி ஆகியவர்கள் தமிழில் கீர்த்தனங்கள் இயற்றினார்கள்.

எனவே, சம்பிரதாயம் அல்லது பழமை வழக்கைப் பின்பற்றுவதில் தமிழிசைக்காரர்கள் மற்றவர்களைவிட இன்னும் தீவிரம் என்றே சொல்ல வேண்டும்.

ஆனால், சம்பிரதாயம் அல்லது பழமை வழக்கு என்ற பெயரால் கலை வளர்ச்சியை அடியோடு தடுத்துவிடக் கூடாது.

தமிழ் நாட்டின் பழைய சங்கீத சம்பிரதாயத்தை அஸ்திவாரமாகக் கொண்டு தியா

கையர், தீக்ஷிதர் முதலியோர் அபூர்வமான சங்கீத மாளிகைகளைக் கட்டினார்கள்.

சங்கீத மும்மூர்த்திகள் கட்டிய மாட மாளிகைகளின் மீது, இனி வரப்போகும் மேதாவிகள், கூட கோபுரங்களைக் கட்டுவதற்கு இடமிருக்க வேண்டும்.

அந்த மேதாவிகள் எப்போது தோன்றுவார்கள் என்பது நமக்குத் தெரியாது. அவர்கள் தோன்றும்போது தாமே தெரியப் படுத்திக் கொள்வார்கள். அவர்களுக்கு வசதி செய்து கொடுப்பதுதான் நமது கடமை.

மேற்கூறிய கடமையைத்தான் தமிழிசை இயக்கம் ஒருவாறு செய்து வருகிறது.

புதிய புதிய தமிழ் சாஹித்யங்கள் தோன்றுவதற்கு ஊக்கமும் வசதியும் அளித்து வருகிறது.

இப்படித் தோன்றும் புதிய ஸாஹித்யங்களில் எவற்றுக்கு ஜீவன் உண்டோ அவை நிலைத்து நிற்கும். ஜீவன் இல்லாதவை விழுந்து விடும். இவற்றினால் சங்கீதம் போய்விடுமோ என்ற பயம் கொஞ்சமும் வேண்டியதில்லை.

ஆகக்கூடி, தமிழிசை இயக்கத்தினால் கர்நாடக சங்கீதம் மேன்மைதான் அடையும் என்று ஸ்ரீ அழகப்பச் செட்டியார் மியூஸிக் அகாடமி மேடையில் கூறியதை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன்.

# செம்பை செய்த அற்புதம்

சென்னையில் நடந்த சங்கீத விழாக்களில் இந்தத் தடவை எல்லா விதத்திலும் சந்தேகமறச் சிறந்து விளங்கியது தமிழிசை விழா வாகும்.

கச்சேரி வரிசையின் அமைப்பிலும், கச்சேரிகள் நடந்த சிறப்பிலும், ரஸிகர் கூட்டப் பெருக்கிலும், அவர்களுடைய உபசரிப்பிலும்,—இன்னும் எல்லாவற்றிலும் தமிழிசை மேன்மை பெற்றிருந்தது.

தமிழிசையை இந்தத் தடவை ரேடியோக்காரர்கள் ஒலி பரப்பினார்கள். தமிழிசை மண்டப வாசலில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் நின்று ஒலி பெருக்கியின் மூலம் தமிழிசையைக் கேட்டு ஆனந்தித்தார்கள்.

* * *

தமிழிசை விழாவில் முதல் கச்சேரி டிசம்பர் 24உ நடந்த செம்பை வைத்திநாத பாகவதரின் கச்சேரிதான். அது முதல்தரக் கச்சேரியாகவும் எல்லா விதத்திலும் முதன்மையான கச்சேரியாகவும் அமைந்து விட்டது.

கேதாரத்தில் "சகல புவன நாயகா!" என்று எடுத்து கார்வை கொடுத்து ஜம்மென்று மேலே நிறுத்தியபோதே சபையில் கலகலப்பு உண்டாகி விட்டது. கச்சேரி இன்றைக்கு 'ஒன்றாம் நம்பர்' என்று தீர்மானம் ஆகி விட்டது.



அப்புறம் கல்யாணி, மோகனம், ஸாவேரி, ஹம்ஸானந்தி ஆகிய ராகங்களில், இதுவரை நாம் கேளாத அழகிய தமிழ்க் கீர்த்தனங்களைப் பொழிந்தார். ஒவ்வொரு பாட்டுக்கும் சபையோர் கரகோஷத்தைப் பொழிந்தனர்.

மேற்படி அருமையான தமிழ்க் கீர்த்தனங்கள் செம்பையின் மூதாதையாகிய 'லலிதா தாஸ'ரால் இயற்றப் பட்டவை என்று அறிகிறேன்.

கச்சேரிகளின்போது அழுது வடியும் சுபாவம் எப்போதுமே செம்பையிடம் கிடையாது. அவருடைய கச்சேரிகளில் எப்போதும் குதூகலமும் கலகலப்புமாகவே இருக்கும். ஆனால், இந்தத் தமிழிசைக் கச்சேரியில் அவருக்கும் சபையோருக்கும் ஏற்பட்ட குதூகலம் மாதிரி இதற்கு முன் நான் பார்த்ததே யில்லை.

மோகன ராகத்தில் "இத்தினமே சுதினம்" என்னும் அழகான கீர்த்தனத்தைச் செம்பை அழுத்தந் திருத்தமாய்ப் பாடி முடித்த போது, சபையோரும் "இத்தினமே சுதினம்" என்பதை அழுத்தந் திருத்தமாய்க் கரகோஷம் செய்து ஆமோதித்தனர்.

ஒரு விஷயத்தில் செம்பை வைத்திநாத பாகவதர் நம்மை அடியோடு ஏமாற்றி விட்டார்.

"செம்பையின் தமிழ் உச்சரிப்பு கொஞ்சம் மலையாள பாணியா யிருக்கலாம்" என்று நாம் எச்சரித்திருந்தோம்.

இது விஷயத்திலேதான் சங்கீத சம்ராட் நம்மை ஏமாற்றி விட்டார். (இந்த மாதிரி ஏமாற்றங்கள் எத்தனை சேர்ந்தாலும் நாம் ஆனந்தமாய் வரவேற்கிறோம் என்று சொல்ல வேண்டியதில்லை.)

தமிழ் நாட்டிலே பிறந்து வளர்ந்த வித்வான்களைக் காட்டிலும் செம்பை தமிழ் வார்த்தைகளைச் சுத்தமாகவும் தெளிவாகவும் கணீரென்றும் உச்சரித்துச் சபையோரைப் பிரமிக்கச் செய்து விட்டார்.

தமிழ் நாட்டின் பிரபல வித்வான்களில், "காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே! என்னைக்—காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே!" என்று பாடுகிறவர்கள் இருக்கிறார்கள்.

"ஆடின தேபடியோ! — நடனம் — ஆடினதே எபடியோ!" என்றும், "எப்போ வாருவாரோ — எந்தன் — காலி தீர" என்றும் பாடுவதைக் கேட்டிருக்கிறோம்.

எனவே, செம்பை பாகவதர் தமிழ்ப் பாட்டுக்களை அப்பழுக்கில்லாமல் சுத்தமாய் உச்சரித்துப் பாடியதைக் கேட்டபோது சபையோர் அதை ஒரு அற்புதமாகவே கருதியதில் சிறிதும் வியப்பில்லை யல்லவா?

ஏழு தமிழ்க் கீர்த்தனங்கள் பாடி, தோடி ராக ஆலாபனம்—தானம்—பல்லவி எல்லாம் முறையாகப் பாடி, சில்லரை உருப்படிகள் பாடி, கடைசியில் "ஸ்ரீராமச்சந்திரனுக்கு ஜயமங்களம்" பாடி முடித்தபோது, "தமிழிசைக்கு இசை அளிக்கக் கூடியவர் செம்பை வைத்திநாத பாகவதர்தான்!" என்று சொல்லும்படி ஆகிவிட்டது.

ஸ்ரீ சௌடய்யா அபரிமிதமான உற்சாகத்துடன் வாசித்துக் கம்பீர நாத வெள்ளத்தைப் பெருக்கினார். ஸ்ரீ முருக பூபதியின் மிருதங்கமும் ஆலங்காடு ராமச்சந்திரனுடைய கடமும் வாய்ப்பாகச் சேர்ந்து ஒரே ஜமாவாகப் போய்விட்டது.

தமிழிசை இயக்கத்தின் சரித்திரத்தில் மேற்படி டிசம்பர் 24உ நடந்த காயன கந்தர்வனின் கச்சேரி ஒரு முக்கிய சம்பவம் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

புதிய 1945-ம் வருஷத்தில் தமிழிசை இயக்கத்துக்குச் செம்பை வைத்திநாத பாகவதரின் தொண்டு இன்னும் பிரமாதமான சிறப்பும் மேன்மையும் அடையப் போகிறதென்று எதிர்பார்க்கிறேன்.

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

"போனால் என்ன?"

"இவை யெல்லாம் சரியான காரியங்களா, என்ன?"

"யுத்தம் முடியும் வரையில் ஸ்டாலின் எது சொன்னாலும் எது செய்தாலும், அதெல்லாம் சரிதான்."

"கிரீஸிலே மட்டும் நீங்கள் கம்யூனிஸ்ட்டுகளுக்கு இடம் கொடுக்க முடியாதென்கிறீர்களே?"

"நாங்கள் போகும் இடத்தில் நாங்கள் செய்வது சரி; ருஷியர்கள் போகும் இடத்தில் அவர்கள் செய்வது சரி."

"சந்தோஷம்; எப்படியாவது நீங்கள் மூன்று பேருமாகச் சேர்ந்து உலகத்தை உருப்படச் செய்தால் சரி."

"பேஷாகச் செய்துவிடுகிறோம்."

"இந்த வருஷத்துக்குள் யுத்தத்தை முடித்து விடுங்கள்."

"அவ்வளவு என்ன அவசரம்? இந்தியாவுக்குள்தான் யுத்தம் நகை காட்டாமல் செய்திருக்கிறோமே?"

"அழகுதான்! யுத்தம் இந்த வருஷத்திலே முடியாவிட்டால், எங்களால் உணவுப் பஞ்சத்தைத் தாங்க முடியாமல் போய்விடும். இட்லி தோசைகளின் வாயில் மண்தான். இன்னும் ஒரு விஷயம் யோசியுங்கள். ஏற்கெனவே, இந்திய சர்க்கார் ஆயிரம் கோடி ரூபாய்க்குமேலே காகித நோட்டுக்களை அச்சடித்து விட்டார்கள். யுத்தம் இந்த வருஷத்துக்குமேலே நடந்து கொண்டிருந்தால், அப்புறம் காகித கிராக்கி அசாத்தியமாகி, 'புரோ நோட்டு' எழுதக் கால் கடிதாசிகூடக் கிடைக்காமல் போய்விடும்!"

"அது ரொம்ப அபாயந்தான்."

"அதனால்தான் நீங்கள் மூன்று பேருமாகச் சேர்ந்து ஒருமனதாக யுத்தத்தை நடத்தி முடியுங்கள் என்று சொல்கிறேன்."

"நான் அதற்குத் தயார்; ரூஸ்வெல்ட்டும் தயார். எங்கள் அருமைத் தோழர் ஸ்டாலினைக் கண்டு பிடிப்பதல்லவா கஷ்டமாயிருக்கிறது? ......" என்று சர்ச்சில் சொல்லிக் கொண்டே இருந்தபோது, ஜன்னலுக்கு வெளியிலிருந்து "சந்தோஷமான புது வருஷம்" என்று ரூஸ்வெல்டின் குரல் கேட்டது. சர்ச்சில் உடனே தாவிப் பாய்ந்தார். இருவருமாகத் தோழர் ஸ்டாலினைத் தேடிக் கண்டு பிடிக்கப் புறப்பட்டார்கள்.

# சிவகாமியின் சபதம்

## அத்தியாயம் 43

## விஷக் கத்தி

குண்டோதரன் நீட்டிய கத்தியைச் சத்ருக்னர் வாங்குவதற்காகக் கையை நீட்டியபோது, "ஜாக்கிரதை! சத்ருக்னா! கத்தியை ஜாக்கிரதையாக வாங்கு!" என்றார் வஜ்ரபாகுவின் வேஷத்திலிருந்த மகேந்திர பல்லவர். பிறகு, குண்டோதரனைப் பார்த்து, "இவ்வளவு அஜாக்கிரதையாக இந்தக் கத்தியை மடியில் கட்டிக்கொண்டு வந்தாயே? இது நெஞ்சில் பதிய வேண்டிய அவசியமே இல்லை; தப்பித் தவறி இதன் முனை உடம்பில் பட்டுச் சிறு காயம் ஏற்பட்டால் போதும்; இரத்தத்தில் விஷங் கலந்து ஆள் ஒரு முகூர்த்தத்தில் செத்துப் போவான்!" என்றார்.

"ஐயோ!" என்றான் குண்டோதரன்.

"போகட்டும்! பிக்ஷுவை எங்கே விட்டு விட்டு வந்தாய்? சீக்கிரம் சொல்லு!" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

குண்டோதரன் அவருடைய கேள்விக்கு மறுமொழி சொல்லாமல் எதையோ நினைத்துக் கொண்டவன் போல், "கடவுள்தான் காப்பாற்றினார்!" என்று கூறினான். அவனுடைய உடம்பு நடுங்கிற்று.

சத்ருக்னர் கோபமாக, "ஆம்; குண்டோதரா! உன்னுடைய முட்டாள் தனங்களினாலும் தாமதங்களினாலும் காரியம் கெட்டுப் போகாமல் கடவுள்தான் காப்பாற்றினார். பல்லவேந்திரர் கேட்பதற்கு மறுமொழி சீக்கிரம் சொல்லு. இத்தனை நேரம் நாங்கள் காஞ்சி மார்க்கத்தில் பாதி தூரம் போயிருக்க வேண்டும்" என்றார்.

குண்டோதரன் இன்னும் கலக்கம் தீராதவனாய், "என்ன சொல்ல வேண்டும்?" என்று கேட்டான். அவனுடைய கண்கள் சத்ருக்னருடைய கையிலிருந்த கத்தியை நோக்கிய போது, அவனுடைய தேகம் மீண்டும் பதறியது.

"நாசமாய்ப் போயிற்று: இன்றைக்கு உனக்கு என்ன வந்து விட்டது, குண்டோதரா? ஏன் இப்படி நடுங்குகிறாய்? உயிர் மேல் உனக்கு இவ்வளவு பற்று எப்போது வந்தது? இதோ பார்! உடனே பிரபுவின் கேள்விக்கு மறுமொழி சொல்லு. இல்லாவிட்டால், இந்த விஷக் கத்தி உன் நெஞ்சில் பாயப் போகிறது!" என்று சத்ருக்னர் கத்தியை ஓங்கினார்.

"எஜமானே! என் முட்டாள் தனத்துக்குத் தக்க தண்டனைதான். இந்த ஏழையின் உயிர் போனால் மோசம் ஒன்றுமில்லை. நந்தகண்ட கண்டரின் அருளினால் பல்லவ குமாரருக்கு ஒன்றும் நேராமல் போயிற்றே! நல்ல வேளை!

கல்கி

"இத்தனை நேரம் அவர் ஏறிய படகு அக்கரை சேர்ந்திருக்குமல்லவா?" என்றான் குண்டோதரன்.

இதைக் கேட்டு, எதற்கும் கலங்காமல் மலைபோல் நிற்கும் வழக்கமுடைய மகேந்திர பல்லவர் கூடச் சற்று நடுங்கி விட்டார்.

"குண்டோதரா! இந்த விஷக் கத்தி மாமல்லன் மேல் பாய்வதற்கிருந்ததா?" என்று கேட்டார்.

"ஆம்; பிரபு! ஐந்தாறு தடவை புத்த பிக்ஷு இந்தக் கத்தியை வைத்துக் கொண்டு, மாமல்லரின் முதுகை நோக்கிக் குறி பார்த்தார். அதைப் பார்த்துக் கொண்டு நான் சும்மாயிருந்தேன். தங்களுடைய கட்டளையினாலேதான்! இல்லாவிட்டால்?......" என்று குண்டோதரன் பற்களை நறநற வென்று கடித்தான்.

* * *

உண்மையிலேயே, மாமல்லர் அன்று இரவு தப்பிப் பிழைத்தது தமிழகம் செய்திருந்த தவப் பயனால் என்றுதான் சொல்ல வேண்டும்.

மகிழ மரத்தினடியில் மாமல்லரும் சிவகாமியும் அமர்ந்து மதுரத் தமிழ் மொழியிலும் மௌன பரிபாஷையிலும் காதல் சம்பாஷணை நடத்திக் கொண்டிருந்தபோது, அவர்கள் இருந்த பாறைக்குப் பின்னாலிருந்து புத்த பிக்ஷு விஷக் கத்தியைக் கையில் வைத்துக் கொண்டு குறி பார்த்த வண்ணமிருந்தார். இரண்டு மூன்று தடவை அவர் குறி பார்த்தும் ஏக் காரணத்தினாலோ எறிவதற்குத் தயங்கினார். மாமல்லரின் பக்கத்திலே சிவகாமி இருந்ததும், தப்பித் தவறிக் கத்தி அவள் மேல் விழுந்து விடுமோ என்ற எண்ணமும்தான் பிக்ஷுவுக்கு அத்தகைய தயக்கத்தை அளித்ததோ என்னமோ, யாருக்குத் தெரியும்?

பிறகு, சிவபெருமான் உகந்தணியும் ஆபரணமான நாகப் பாம்பு அங்கு வந்து சேர்ந்து, சிவகாமியும் மாமல்லரும் மகிழ மரத்தடியிலிருந்து கிளம்பி நிலா வெளிச்சம் பளிச்சென்று எரித்த விசாலமான பாறையில் போய் உட்காருவதற்குக் காரணமாயிற்று.

புத்த பிக்ஷுவும் தான் ஒளிந்திருந்த இடத்திலிருந்து வெளிக் கிளம்பி வேறிடத்துக்குப் போய் மறைந்து கொண்டார்.

இதையெல்லாம் இன்னொரு பாறை மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த குண்டோதரனுடைய கை ஊறிற்று. பின்புறமாகச் சென்று புத்த பிக்ஷுவின் கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொன்றுவிட வேண்டுமென்ற அடங்காத ஆசை அவனுக்கு உண்டாயிற்று. அந்த ஆசையை அவன் அடக்கிக் கொண்டு பொறுமையுடனிருந்த காரணம் மகேந்திர சக்கரவர்த்தியின் கண்டிப்பான கட்டளையேயாகும்.

அன்று பகலெல்லாம் குண்டோதரனுக்கு வித விதமான விசித்திர அநுபவங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. அவற்றில் ஒரு சிலவற்றை மட்டுந்தான் அவன் ஆயனரிடம் கூறினான். மண்டபப் பட்டுக் கிராமத்தில் அவன் பானைகள் சம்பாதித்துத் தெப்பம் கட்டிக் கொண்டு அக்கரை போய்ச் சேர்ந்தபோது, அங்கே வெள்ளம் வந்த அன்றிரவு மாமல்லரைச் சுமந்து வந்த குதிரை பரிதாபமாய் அங்கு மிங்கும் வெறித்துப் பார்த்துக் கொண்டு நிற்பதைக் கண்டான். வெள்ளத்திலே மிதந்தும், நீந்தியும், எப்படியோ அந்தக் குதிரை தட்டுத் தடுமாறி வராக நதியின் அக்கரைக்கு வந்து சேர்ந்திருந்தது. தெப்பத்தை நதிக் கரையில் மரமடர்ந்த மறைவான இடம் ஒன்றில் அவன் கட்டிவிட்டு, அந்தக் குதிரை மீது ஏற எத்தனித்தான். குதிரை முரண்டியது. அதை வசப்படுத்தி அடக்குவதற்கு வெகு பாடுபட வேண்டியிருந்தது. அந்தச் சமயத்தில் அங்கு வந்து சேர்ந்த பல்லவ வீரர்கள் சிலர், அவனைச் சிறைப் படுத்திக் கொண்டு போய்த் தளபதி பரஞ்சோதியின் முன்னால் நிறுத்தினார்கள். மாமல்லரைப் பற்றிப் புலன் விசாரித்துக் கொண்டு வந்த பரஞ்சோதி குண்டோதரனிடமிருந்து தகவல் தெரிந்து கொண்டதும், வராக நதியைக் கடந்து அக்கரை போவதற்குப்

படகுகள் சம்பாதித்து வரும்படி தம் வீரர்களுக்குக் கட்டளையிட்டார்.

குண்டோதரன் தான் முன்னதாகப் போய் மாமல்லருக்கு நல்ல செய்தி தெரிவிக்கலாமென்று கிளம்பி வந்து பார்த்தபோது, தான் விட்டிருந்த இடத்தில் பானைத் தெப்பத்தைக் காணாமல் வியப்படைந்தான். கிட்டத்தட்ட அக்கரைக்குச் சமீபத்தில் ஒரு தெப்பம் போவதையும், அதில் ஒரு தனி ஆள் இருப்பதையும் பார்த்தான். அஸ்தமன சூரியனின் மஞ்சள் கிரணங்கள் அந்தத் தனி ஆள் உடுத்தியிருந்த ஆடைமீது விழுந்து, அது காவி உடை என்று தெரியப்படுத்திற்று.

புத்த பிக்ஷுக்களையும், பொதுவாகக் காவித் துணி அணிந்தவர்களையும் குண்டோதரன் அப்போது வாயில் வந்தபடி வையத் தொடங்கினான். அதைக் கேட்டுக் கொண்டு, இரண்டு பேர் அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் தான் வஜ்ரபாகு வேஷத்தில் தோன்றிய மகேந்திர பல்லவரும், சத்ருக்னரும். "யாரை அப்பா, வைகிறாய்?" என்று சக்கரவர்த்தி கேட்டதற்குக் குண்டோதரன் விவரம் கூறினான். உடனே மூன்று பேருமாக மரக் கட்டைகளையும் நுணைக் கொடிகளையும் சேகரித்து ஒரு மரக் கட்டைத் தெப்பம் ஆக்கினார்கள். அந்தத் தெப்பத்தில் அவர்கள் அக்கரை சேர்ந்தபோது சூரியன் அஸ்தமித்து இருட்டுகிற சமயமாயிருந்தது. மங்கிய மாலை வெளிச்சத்தில் சற்றுத் தூரத்தில் ஒரு பாறையின் மேல் நின்று சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்த புத்த பிக்ஷுவை அவர்கள் கண்டார்கள்.

சக்கரவர்த்தி குண்டோதரனைப் பார்த்துச் சொன்னார் :— "குண்டோதரா! இத்தனை காலமாக நீ செய்திருக்கும் வேலையெல்லாவற்றையும் விட முக்கியமான வேலை உனக்கு இப்போது தரப் போகிறேன். அதில் ஒரு அணு அளவு கூடப் பிசகாமல் சர்வ ஜாக்கிரதையாய்ச் செய்து முடிக்க வேண்டும். இந்த பிக்ஷுவை ஒரு கண நேரங்கூட விடாமல் நீ பின் தொடர்ந்து போக வேண்டும். உன் கண் பார்வையிலிருந்து அவர் அகலுவதற்கு இடம் கொடுக்கக் கூடாது. நீ அவரைப் பின் தொடர்கிறாய் என்பதும் அவருக்குத் தெரியக் கூடாது. ஆற்றுக்கு அக்கரையில் எங்களுக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. திரும்பிப் போய் அதை முடித்துவிட்டு இதே இடத்துக்கு மறுபடியும் வந்து சேருகிறோம். இவ்விடத்தில் உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம். சந்திரன் தலைக்குமேல் வரும்போது நீ இங்கே வந்து எங்களுக்குச் சமாசாரம் தெரிவிக்க வேண்டும். பிக்ஷு எங்கே போனார், என்னென்ன செய்தார் என்று தெரியப்படுத்த வேண்டும். கூடுமானால், பிக்ஷுவை எங்கேயாவது ஓரிடத்தில் பத்திரப்படுத்திவிட்டு வா! ஆனால், அவர் முன்னால் மட்டும் நீ எதிர்ப்படவே கூடாது."

இவ்விதம் கட்டளையிட்டு, "நான் சொன்னதையெல்லாம் நன்றாய் மனதில் வாங்கிக் கொண்டாயா, குண்டோதரா! எல்லாம் தவறின்றிச் செய்வாயா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"அப்படியே செய்வேன், பிரபு!" என்று ஒப்புக்கொண்டு பிக்ஷுவைத் தொடர்ந்தான் குண்டோதரன்.

இதன் காரணமாகத்தான் பிக்ஷுவின்மேல் பொங்கி வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு குண்டோதரன் பலமுறையும் சும்மா இருக்க வேண்டியதாயிற்று.

• • •

ஆயனரும் சிவகாமியும் மாமல்லரும் பாறைப் பிரதேசத்திலிருந்து கிராமத்தை நோக்கிப் புறப்பட்ட போது, அவர்களுக்குச் சற்றுப் பின்னால் பாதை ஓரத்து மரஞ் செடிகள், புதர்களில் மறைந்து புத்த பிக்ஷுவும் சென்றார். புத்த பிக்ஷு அறியாமல் அவரைப் பின் தொடர்ந்து குண்டோதரனும் போகலானான்.

கிராமத்தின் முனையிலே யிருந்த கோயிலின் மதிலை நெருங்கியதும், மடத்து வாசலில் கூட்டமாக நிற்பவர்கள் யார் என்று பார்த்து வர, ஆயனர் சென்றாரல்லவா? அப்போது

சிவகாமிக்கும் மாமல்லருக்கும் அன்பு மொழிகள் பேசவும், பரஸ்பரம் மறவாமைப் பிரதிக்ஞை செய்து கொள்ளவும் மறுபடி ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. அவர்கள் நின்ற இடம் கோயில் மதில் திருப்பத்தின் ஒரு மூலை. அதே மூலையின் மற்றொரு திருப்பத்தில் நின்ற புத்த பிக்ஷுவுக்கும் தமது கத்தி முனையைக் குறி பார்க்க அப்போது சந்தர்ப்பம் கிடைத்தது. ஆனால் குறி பார்த்த கத்தியை எறிவதற்கு மட்டும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஏனெனில், பிக்ஷுவின் கை எட்டக் கூடிய இடத்திலே சிவகாமியும் அவளுக்கு அந்தண்டைப் புறத்தில் மாமலலரும் நின்று கொண்டிருந்தார்கள். சிவகாமியும் மாமல்லரும் இடம் மாறி நிற்கும் நேரத்தைப் பிக்ஷு எதிர் பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது.



கோயில் மதிலுக்கு எதிர்ப்புறத்திலே யிருந்த தோட்ட வேலிக்குப் பின்னால் மறைந்து நின்று மேற்படி காட்சியைக் குண்டோதரன் பார்த்துக் கொண்டிருந்தான். இரண்டு மூன்று தடவை பிக்ஷு கத்தியை ஓங்கியதைப் பார்த்த பிறகு இனிமேல் பொறுக்க முடியாதென்று குண்டோதரன் அவர்மேல் பாய்வதற்குச் சித்தமான போது, நல்லவேளையாக ஊர்ப் பக்கமிருந்து பரஞ்சோதி முதலியவர்கள் திடுதிடுவென்று வந்துவிட்டார்கள். பிக்ஷுவும் உடனே நகர்ந்து பின்னால் போய்விட்டார்.

மாமல்லரைப் பரஞ்சோதி அழைத்துக்கொண்டு போனது. அவர்களுக்குப் பின்னால் ஆயனரும் சிவகாமியும் சென்றது. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான் குண்டோதரன். சற்றுப் பின்னர் புத்த பிக்ஷு அதே மதில் மூலைக்கு அருகில் வந்து நிற்பதையும், பரஞ்சோதியும் மாமல்லரும் கோயிலுக்குள் நுழைவதை அவர் கவனிப்பதையும் கூடப் பார்த்தான்.



பின்னர், குண்டோதரன் சற்றும் எதிர்பாராத காரியம் ஒன்றைப் புத்த பிக்ஷு செய்தார். கோயில் பிராகாரத்துக்கு உட்புறமிருந்து வெளியே படர்ந்திருந்த மரக்கிளைகளை இலேசாகப் பிடித்துக் கொண்டு மதிலின்மேல் அவர் ஏறினார். சிறிது நேரம் மதின் மேலேயே உட்கார்ந்து பார்த்துவிட்டுப் பிறகு உட்புறம் இறங்கினார்.

அடுத்த கணத்தில் குண்டோதரன் வேலியைத் தாண்டிக் குதித்து, வேலிக்கும் கோயில் மதிலுக்கும் இருந்த இடைவெளியை இரண்டே எட்டில் தாண்டி வந்தான். அதே மரத்தடிக்கு வந்து சேர்ந்ததும் ஒரு விநாடி நேரம் அவனுடைய நெஞ்சு தொண்டைக்கு வந்து விட்டது. உடம்பும் பதறி நடுங்கி விட்டது. ஏனெனில், அவன் நின்ற இடத்துக்கு வெகு சமீபத்தில் ஒரு சிறு பாம்பு நெளிவதைக் கண்டான். அங்கிருந்து துள்ளி நகர்ந்து கொண்டு மறுபடியும் பாம்பு இருந்த இடத்தைப் பார்த்த போது அவனுக்குச் சிறிது வியப்புண்டாயிற்று. ஏனெனில் பாம்பு அசையாமல் கிடந்த இடத்திலேயே கிடந்தது. மறுபடியும் உற்றுப்

பார்த்த பின், 'களுக்' என்று தனக்குத் தானே சிரித்துக் கொண்டான். உண்மையில் அது பாம்பு இல்லையென்றும், நாகம் போன்ற பிடியமைந்த கத்தி அங்கே தரையில் கிடக்கிறதென்றும் தெரிந்தது. அந்தக் கத்தியை விரைந்து எடுத்து மடியிலே கட்டிக் கொண்ட பிறகு, மதில் மேல் ஏறுவதற்காக அண்ணாந்து பார்த்தான்.

அச்சமயம், மதிலுக்கு அப்புறத்தில் மரக் கிளைகள் அசையும் சத்தம் உண்டாகவே, சட்டென்று ஒரு சந்தேகம் உதித்தது. உடனே மதில் மூலையின் இன்னொரு பக்கத்துக்கு நகர்ந்து சுவரோடு சுவராக ஒட்டிக் கொண்டு நின்றான். அவன் அப்படி நகர்ந்து நின்றதுதான் தாமதம். புத்த பிக்ஷுவின் தலை மதில் சுவர்மேலே காணப்பட்டது. பிக்ஷு வெளிப்புறம் இறங்குவதற்கு அதிக நேரம் ஆகவில்லை. இறங்கியவர் தரையிலே உற்றுப் பார்த்த வண்ணம் எதையோ தேடத் தொடங்கினார்.

அவர் எதைத் தேடுகிறார் என்பதை உடனே ஊகித்து உணர்ந்துகொண்ட குண்டோதரன் சிறிதும் சத்தமில்லாதபடி தான் நின்ற இடத்திலிருந்து மதில் மேல் ஏறி அப்பால் குதித்தான். அவன் குதித்த இடத்துக்கு வெகு சமீபத்தில் மதில் சுவரை ஒட்டிக் கோயில் மடைப்பள்ளி இருந்தது. அங்கே சென்று மடைப்பள்ளிச் சுவருக்குப் பின்னால் அவன் மறைந்து கொண்டான்.

சற்று நேரத்துக்குப் பிறகு புத்த பிக்ஷு மறுபடியும் கோயில் பிராகாரத்துக்குள்ளே குதித்தார். குதித்த இடத்தில் பன்னீர் மரத்தடியில் குனிந்து தேடினார்.

அதிலும் பயனின்றி அவர் நிமிர்ந்த போது, அவருடைய மூச்சு நாகப் பாம்பின் சீறலைப்போல் தொனிப்பதைக் கேட்டு, அஞ்சா நெஞ்சமுடைய குண்டோதரன் கூட நடுங்கினான்.

புத்தபிக்ஷு சற்று நேரம் வரையில் அந்தப் பன்னீர் மரத்தடியிலேயே நின்றார். மதில் சுவரோரமாகவே பிராகாரத்தில் நடந்து சென்று முன்புறமிருந்த நந்தி மேடையை எட்டிப் பார்த்தார். மறுபடியும் திரும்பி அதே பன்னீர் மரத்தடிக்கு வந்து சேர்ந்தார்.

இம்மாதிரியே வெகு நேரம், ஏறக்குறைய நடு நிசி வரையில் போய் விட்டது.

இடையிடையே கோயிலுக்கு வெளியிலிருந்து போர் வீரர்களின் ஜயகோஷமும் கிராம வாசிகளின் ஆரவார முழக்கமும் கேட்டுக் கொண்டிருந்தன.

ஏறக்குறைய அர்த்தராத்திரி ஆன போது, கோயிலின் கர்ப்பக் கிருஹக் கதவுகளையும், வெளி வாசல் கோபுரத்தின் கதவுகளையும் சாத்தித் தாளிடும் சத்தம் கேட்டது.

இதற்குப் பிறகு நாகநந்தியடிகள் மரத்தடியிலிருந்து எழுந்து கோயில் பிராகாரத்தைச் சுற்றி நடக்கத் தொடங்கினார். குண்டோதரன் மறைந்திருந்த இடத்துக்கு வெகு சமீபமாக அவர் போனபொழுது கையிலிருந்த கத்தியை அவர் மீது செலுத்தி விடலாமா என்று குண்டோதரன் துடி துடித்தான். ஆனாலும், சக்கரவர்த்தியின் கட்டளையை எண்ணி ஆவலை அடக்கிக் கொண்டான்.

மடைப்பள்ளியின் கதவு திறந்திருந்ததை பிக்ஷு பார்த்து விட்டு உள்ளே நுழைந்ததைக் குண்டோதரன் கண்டான். சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தான். இரண்டே எட்டில் மடைப்பள்ளி வாசலுக்குச் சென்று கதவை இலேசாகச் சாத்தி வாசற் புறத்துத் தாழ்ப்பாளை இழுத்துப் போட்டான்.

உடனே மதில் சுவர் ஏறிக் குதித்து மடத்து வாசலண்டை அவன் அணுகியபோது, அங்கு இரண்டொருவர் மட்டும் நின்றார்கள். அவர்களிடம் மாமல்லர் முதலியோர் சென்று விட்டார்கள் என்பதைத் தெரிந்து கொண்டு, வராக நதியின் தோணித் துறையை நோக்கி விரைந்து சென்றான். படகுகள் கிளம்பிய பிறகே குண்டோதரன் தோணித் துறைக்கு வந்து சேர்ந்தான் என்பதை முன் அத்தியாயத்தில் பார்த்தோம்.

# வருகிறது!

# ப்ரகதி

# ஸ்ரீ வள்ளி

**T.R.மஹாலிங்கம்**
**குமாரி ருக்மணி**
**T.R.ராமச்சந்திரன்**
**K. மஹாதேவன்**
**பேபி கமலா**
**கிருஷ்ணன்·மதுரம்**





**டைரக்ஷன் A.V.மெய்யப்பன் & A.T.கிருஷ்ணஸ்வாமி B.A.**

# பல்லாண்டு கூறுகிறோம்!

தமிழ்ப் பெரு மக்களுக்குப் பல்லாண்டு கூறுகிறோம். அவர்களுடைய பெரிய மனதையும் பெருந் தன்மையையும் பெரு மகிழ்ச்சி கொண்டு வாழ்த்துகிறோம்.

சென்று போன 1944-ம் வருஷத்தில் உலகம் என்ன பாடு பட்டாலும், எந்தக் கேடு கெட்டாலும், தமிழ் நாட்டுக்குப் பல விதங்களிலும் ஒரு நல்ல வருஷமாகவே அது இருந்திருக்கிறது.

சென்ற வருஷத்தில் தமிழ் நாட்டில் நடந்த அரும்பெரும் காரியங்களில் அமரகவி பாரதியாருக்கு ஒரு ஞாபகச் சின்னம் அமைக்க யோசனை பிறந்ததும், அதற்காக நிதி வசூல் செய்யத் தொடங்கியதும் குறிப்பிடத் தக்கவை யாகும்.

•  •  •

பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் அவருக்கு ஞாபகச் சின்னம் அமைப்பதற்குக் குறைந்த பட்சம் ஐயாயிரம் ரூபாய் வேண்டும் என்று குறிப்பிட்டு, தமிழ் மக்கள் இத்தொகை கொடுப்பார்களோ, என்னமோ என்ற சந்தேகத்தையும் இரண்டு மாதத்துக்கு முன்பு வெளியிட்டிருந்தோம்.

நமது சந்தேகம் எவ்வளவு பிசகானது என்பதைத் தமிழ் மக்கள் காட்டி விட்டார்கள்.

அப்படிச் சந்தேகப்பட்ட நமது கைவிலிருந்து பாரதி நிதி வசூலைத் தமிழ் மக்கள் தாங்களே எடுத்துக் கொண்டு 1944-ம் வருஷ முடிவிற்குள் ரூ. 17,203—9—4 சேகரித்து விட்டார்கள்.

குறைந்த பட்சம் ரூபாய் இருபத்தையாயிரமாவது சேர்த்து விட்டுத்தான் நிதி வசூலை நிறுத்துவார்கள் போலிருக்கிறது.

•  •  •

இந்த இதழில் வெளியாகியிருக்கும் ஜாபிதாவில், வெள்ளித் திரையில் பாடியும் நடித்தும் பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்களின் அபிமானத்தைப் பெற்ற ஸ்ரீ பி. யு. சின்னப்பாவின் ரூ. 501 நன்கொடை தலைமை வகிக்கிறது.

அடுத்த படியாக, பிரசித்தி பெற்ற மதுரை தேவி பால விநோத சங்கீத சபையின் தலைவர் நவாப் ராஜமாணிக்கத்தின் நன்கொடையைக் குறிப்பிட வேண்டும்.

நவாப் ராஜமாணிக்கம் தமிழ் நாடகக் கலைக்குச் செய்து வரும் அரிய தொண்டோடு, அவருடைய தான தருமங்களின் விசேஷமும் பிரசித்தியானது.

தற்சமயம் திருவனந்தபுரத்தில் மிகப் புகழுடன் "ஐயப்பன்" என்னும் நாடகத்தை நடத்தி வரும் மேற்படி நாடக சபையின் 12-ம் ஆண்டு விழா சென்ற டிசம்பர் 25௳ நமது திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயரின் தலைமையில் சிறப்பாக நடந்தது குறித்து மகிழ்கிறோம்.

இந்த விசேஷ சந்தர்ப்பத்தை முன்னிட்டு நவாப் ராஜமாணிக்கம் ரூ. 804 நமக்கு அனுப்பி, அதைப் பின்வருமாறு விநியோகிக்கச் சொன்னதற்கு இணங்க அவரவர்களுக்கு அனுப்பி விட்டோம்:—

ஸ்ரீ கு. ப. ரா. நிதிக்கு ரூ. 101—0—0

கும்பகோணம் மகா மகம்
அன்னதான நிதிக்கு ரூ. 101—0—0

எட்டயபுரம் பாரதி ஞாபக
கார்த்த நிதிக்கு ரூ. 251—0—0

ஸ்ரீ சத்தியமூர்த்தி ஞாபக
கார்த்த நிதிக்கு ரூ. 351—0—0

மேற்படி நாடக சபையின் 12-ம் ஆண்டு விழாவை முன்னிட்டு நவாப் ராஜமாணிக்கத்துக்கு வாழ்த்துக் கூறிய திருப்புகழ் மணி முதலிய பெரியோர்களின் கூட்டத்தில் நாமும் சேர்ந்து நமது மனமார்ந்த வாழ்த்துக்களைக் கூறுகிறோம்.

## டிசம்பர் 31௳ வரையில் பாரதி நிதி வசூல்

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ பி. யு. சின்னப்பா, (சினிமா நடிகர்.) கீழ்ப்பாக்கம், சென்னை | 501 | 0 | 0 |
| நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம், மதுரை தேவி பால விநோத சபை, (திருவனந்தபுரம் முகாம்.) | 251 | 0 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் பாடசாலை, (உபாத்தியாயர்களும் மாணவர்களும்), தியாகராய நகர், சென்னை | 179 | 0 | 0 |
| ஸ்ரீ எம். வி. சுப்ரமணிய அய்யர், சன்னதி வடக்குத் தெரு, புரசைவாக்கம், சென்னை | 51 | 0 | 0 |
| சிறுவர்கள் சங்கம், சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல், ஹெட்மாஸ்டர் ஸ்ரீ எஸ். பால கிருஷ்ண ஜோசியர் மூலம் | 35 | 0 | 0 |
| ஸ்ரீ டி. எச். கங்கப்பா, வண்ணாரப் பேட்டை, சென்னை | 25 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| மானேஜர், ஏ. ஆ. எஸ். ஏ. காரி புரொடக்ஷன், அமிஞ்சி | 17 | 4 | 0 |
| சோளவந்தான் ஸ்ரீ எல். பி. ராமசாமி மூலம் | 16 | 10 | 0 |
| எம். ஆர். எம். சுந்தரம் ("சுந்தர"). அகில இந்திய ரேடியோ, டெல்லி | 13 | 6 | 0 |
| தமிழ் மாணவர்கள், நூர்க்காட்டுப் பாளையம் சாலை, திருவனந்தபுரம் | 11 | 12 | 0 |
| ஸ்ரீ தி. நெல்லையப்பன், தூத்துக்குடி | 11 | 0 | 0 |
| ஸ்ரீ என். ராமச்சந்திரன், திருவல்லிக்கேணி | 11 | 0 | 0 |
| தி. பொ. நாராயணசாமி பாரதி, சன்மார்க்க சபை, மேலைச் சிவபுரி | 10 | 6 | 0 |

ரூ. 10—0 0: ஸ்ரீமான்கள் செல்லமுத்துப் பிள்ளை, கல்வி ஏஜண்டு, கம்போளா, ஸிலோன்: எஸ். ஷண்முகரத்ன சேர்வை, யாழ்ப்பாணம்: எஸ். கஸ்தூரி, பம்பாய்: ஆர். ஆர். ஆதித்தன், ராதாகிருஷ்ண விலாஸ், கவேயாமாலி.

| | | | |
|---|---|---|---|
| * பத்து ரூபாய்க்குக் குறைந்த நன்கொடைகள் | 135 | 13 | 0 |
| * அன்பர்கள் மூலம் வந்த நன்கொடைகள் | 887 | 15 | 0 |

| | |
|---|---|
| மொத்தம் | ரூ. 2195—12—0 |
| ஏற்கெனவே வசூல் | ரூ. 15007—13—4 |
| ஆக மொத்தம் | ரூ. 17203—9—4 |

## வழி காட்டிய பம்பாய்

பாரதியார் நிதி வசூலுக்கு நாம் விண்ணப்பம் செய்து கொண்டவுடனே, பம்பாய்த் தமிழன்பர்கள் இதற்காகவென்று ஒரு பொதுக் கூட்டம் நடத்தி நிதி வசூல் கமிட்டி ஏற்படுத்திய விவரம் தெரிவித்திருக்கிறோம். இது விஷயத்தில் தமிழ் நாட்டுக்கே வழி காட்டியவர்களாகி விட்ட பம்பாய்த் தமிழன்பர்கள் பாரதியார் ஞாபகார்த்த நிதிக்கு இதுவரையில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் அனுப்பி யிருக்கிறார்கள். சென்ற 21—12—44 இதழில் வரவு காட்டப்பட்டிருந்த ரூ. 501—0—0க்கு விவரம் இதே தரப்பட்டிருக்கிறது. பம்பாயிலுள்ள தென்னிந்தியர்களின் வசதிக்காகத் தென்னிந்தியர்களால் சிறந்த கூட்டுறவு முறையில் நடத்தப்பட்டு வரும் கோவாபரேடிவ் கன்ஸ்யூமர்ஸ் ஸொஸைடியார் தங்களுடைய பொதுக் கூட்டத்தில் தீர்மானம் செய்து ரூ. 51 அனுப்பியிருப்பதை விசேஷமாகப் பாராட்டுகிறோம்.

| | | | |
|---|---|---|---|
| ஸவுத் இண்டியன் கோஆபரேடிவ் கன்ஸ்யூமர் ஸொஸைடி லிமிடெட் | 51 | 0 | 0 |
| எஸ். என். அய்யர் | 25 | 0 | 0 |
| கருக்கு எழுத்தாளர் சங்கம், மட்டுங்கா. | 20 | 0 | 0 |
| அனந்த கிருஷ்ணய்யர் வகையரா | 13 | 0 | 0 |
| ஏ. கே. ராமலிங்கம் | 10 | 0 | 0 |
| என். எஸ். டிஸாங் | 10 | 0 | 0 |
| கே. ராஜகோபால் | 10 | 0 | 0 |

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் கே. எஸ். ராமமூர்த்தி, கே. எஸ். மகாதேவன், எஸ். கிருஷ்ணசாமி, கே. எஸ். என். சர்மா, எஸ். ஏ. அனந்தாச்சாரி, டி. எஸ். ராமகிருஷ்ணய்யர், பி. பாலலிங்கம், வி. ஒய். கோரே, ஓர் அபிமானி, அ. க. ஸ்ரீனிவாசன்.

ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் எஸ். சந்தோர்கர், கோபாலகிருஷ்ணா, பி. ஆர். அடார்கர், பி. எம். முல்காங்கர், எச். பி. பரால்கர், ஆர். பி. ஒவலேகர், ஜீ. கிருஷ்ணமூர்த்தி.

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் என். கே. அம்பேகர், பி. என். மணி, கே. எச். வீதாரம், கே. எஸ். ராமலிங்கம், என். கே. ஸ்ரீனிவாசன், கே. எஸ். போஸ், நாராயண மேனன், ஒய். வி. குல்கர்னி, அனந்தராமன், எஸ். பி. ராய், எஸ். ஒய். அபயங்கர், டி. வி. புரந்தரே, பி. எஸ். காசிபே, டி. ஜே. ஜோக்லேகர், என். ஜீ. நட்கார்னி, டி. எஸ். ஜோஷி, பி. வி. நரேன்ரட், வி. கிருஷ்ணராவ், வெங்கடராமன், சேஷாத்ரி, ச. ஏ. சிவராம கிருஷ்ணன், வி. ஆர். சுப்ரமணியம், என். வி. மஜும்தார், வி. எஸ். வைதேல, எம். பி. கல்யாணம், எஸ். ராமநாதன், கே. எஸ். சங்கரலிங்கம், ஸ்ரீமதி கோமதி வெங்கடராமன், வி. தாணு சுப்ரமணியம், ஏ. ஆர். எஸ். மணி, வி. கே. கிருஷ்ணன், எஸ். பாஸ்கரன், கே. பத்மநாபன், டி. ஏ. பிரான்ஸிஸின், ஜே. தாமஸ், ஓர் அபிமானி.

இரண்டு ரூபாய்க்கு கட்டப்பட்ட நன்கொடைகளின் மொத்தம் ரூ. 219—0—0.

* விவரம் அடுத்த இதழில்.

# தெய்வ சங்கல்பம்






முற்றத்தில் கடும் வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது. பிற்பகல் இரண்டரை மணி யிருக்கும். போட்டது போட்ட வாக்கில் வீடு ஏக அலங்கோலமாய்க் கிடந்தது. கல்யாணத்திற்குப் பத்து நாட்கள் முன்பே இந்தக் கோலம். இன்னும் கல்யாண தினமே வந்து விட்டால் வீடு என்னமாய்த்தான் விளங்கப் போகிறதோ?

விசிப் பலகையில் படுத்துக் கொண்டிருந்த நாகம்மாளுக்கு அன்று எதைப் பார்த்தாலும் எரிச்சல் எரிச்சலாக வந்துகொண்டிருந்தது. அன்று காலையிலிருந்து உடம்பு சரியா யில்லை. லேசாகத் தலைவலியும் ஜலதோஷமுந்தான். "சுசீலாவின் கல்யாணத்துக்கு எண்ணிப் பத்து நாட்கள்கூட இல்லை. இந்தச் சமயம் பார்த்து உடம்பு என்று படுத்துக் கொள்கிறாயே, நாகம்! எனக்கு ஒன்றும் புத்தி ஓடமாட்டேனென்கிறது" என்று அவளுடைய கணவர் பிரம்மதேவ சாஸ்திரிகள் அங்கலாய்த்து விட்டுப் போனதை நினைத்து அவள் மனது நிலை கொள்ளாது சஞ்சல மடைந்தது. அதேதாற் போல் கல்யாணத்தை நினைத்துக்கொண்ட போது ஒரு புறம் களிப்பும் ஒரு புறம் மனத் தாங்

னும் ஏற்பட்டது. "எல்லாம் அந்தச் சனியன் பிடித்த ஸரஸ்வதியால். அவளுக்குப் பணம் அனுப்பினது போதும் என்று அடித்துக் கொண்டபோது இவர் கேட்டால் தானே? இன்றைக்கு எனக்கு இருக்கிற ஒரே ஒரு குழந்தையின் கல்யாணத்தில் இவருக்குச் செட்டு வந்து விட்டது. இருக்கட்டும்!" என்று அவள் அவ்வப்போது ஆத்திரப்பட்டு வந்தும், கல்யாணக் குதூகலம் என்னமோ அவள் மனதில் குடிகொண்டுதானிருந்தது.

ஏதோ நினைத்துக் கொண்டவள்போல் திடீரென்று தள்ளாடி எழுந்திருந்து அருகிலிருந்த ஊஞ்சல் பலகையை நோக்கிப் போனாள். ஊஞ்சல் பலகையின் மேல் தாம்பூலத் தட்டுகளும், வெற்றிலைப் பெட்டிகளும், சந்தனக் கிண்ணங்களும், கட்டுக் கட்டாகக் கல்யாணப் பத்திரிகைகளும் கிடந்தன. நாகம்மாள் அந்தக் கல்யாணப் பத்திரிகைக் கட்டுகளில் கையை விட்டு ஒன்றை யெடுத்துப் பிரித்து அதில் ஆவலுடன் தன் கண்களை ஓட்டினாள்.

"சிரஞ்சீவி சுகவாஸனுக்கு...சௌபாக்கியவதி கமலாவை, கன்னிகாதானம் செய்து கொடுப்பதாய்......" என்ற வார்த்தைகளை அகமகிழ்ந்து படிக்க இதுவரை எத்தனையோ தடவை அம்மாதிரி திடீர் திடீரென்று அவள் எழுந்து நடந்து சென்றிருக்கிறாள். ஆனாலும் சபலம் என்னமோ குறைந்ததாகக் காணப்படவில்லை. அப் பத்திரிகையை மூடியபோது நாகம்மாள் அதனுடைய முகப்பைக் கவனித்ததும் சட்டென்று தேளைக் கண்டதுபோல் திடுக்கிட்டு, எரித்து விடுவது போல் அப் பத்திரிகையை உற்று நோக்கினாள். அப் பத்திரிகையின் முகப்பில், பிரம்மதேவ சாஸ்திரிகளின் தலையெழுத்தைப் போன்ற கையெழுத்தில், "ஸரஸ்வதி, வைத்தியக் கல்லூரி, சென்னை" என்று விலாசமிட்டிருந்தது.

மறு கணம் அவளுடைய விரல்கள் அந்தப் பத்திரிகையைத் துண்டுத் துண்டாகக் கிழித்தன.

2

மேற்கூறப்பட்ட விவாகப் பத்திரிகை அவ்விதம் நாகம்மாளின் கோபத் தீக்கு இரையான காரணத்தை நாம் அறிய வேண்டுமானால் அக் குடும்பத்தின் பூர்வோத்திரங்களை ஆராய வேண்டியது அவசியமாகிறது.

தன் சொந்த விவகாரங்கள் சீர் கெட்டுக் கிடக்க, சமூக சீர்திருத்தம், பொதுஜன ஊழியம் என்று சொல்லிக்கொண்டு தேச முன்னணியில் வந்து அபிநயிப்பவர்கள் அநேகம் பேர்களை நாம் பார்த்திருக்கிறோம். அப்படிப் பட்டவர்களைப் பற்றி ஊரில் அசூயைக்கும் அவதூறுக்கும் குறைச்சலேயிருக்காது. பிரம்மதேவ சாஸ்திரிகளின் வாழ்க்கையும் துரதிருஷ்டவசமாக இந்த ரகத்திலேயே சேர்க்கப்பட்டது.

"பால்ய விவாகத்தின் தீமைகளை நமக்கு எடுத்துச் சொல்ல வருகிறாரே, இவருடைய பெண்ணுக்கு எத்தனை வயதில் கல்யாணம் நடந்ததென்று கேளுங்கள்!"

"இரண்டாம் விவாகத்தின் தொல்லைகளை இவர் இங்கு எடுத்துக் கூறுவது அங்கு இளையாள் காதுக்கு எட்டிவிடப் போகிறது!"

"விதவா விவாகம் என்பது பேச்சோடு தானா? வீட்டிலிருக்கும் தன் சிறு பெண்ணைக் கவனித்தாரா?"

ஏதோ விதி வசத்தினால் சமூக சீர்திருத்தத் துறையில் கால் வைக்க நேர்ந்த சாஸ்திரிகளின் காதில் இன்று இவ்விதமான பேச்சுகள் விழுந்து கொண்டிருக்கின்றன. கால வித்தியாசத்தினால் அவர் வாழ்க்கையில் சம்பவித்த இரு பெரும் பிழைகளின் விளைவுகளே தான் அவை.

முதல் பிழை அவருடைய முதல் மனைவியால் ஏற்பட்டது. ஸரஸ்வதி பிறந்ததிலிருந்தே, மூத்தாளை வியாதியும் வெக்



னையும் பிடுங்கித் தின்று படுக்கையோடு படுக்கையாகப் போட்டு விட்டது. குழந்தைக்குக் கல்யாணம் செய்து பார்த்து விட்டுத்தான் கண்ணை மூடுவது என்று சொல்லிக்கொண்டே வந்து, விளையாட்டுப் போல் ஸரஸ்வதிக்கு ஆறு வயதா யிருந்த போதே கல்யாணத்தைச் செய்து தீர்த்தான். இந்த லக்ஷணத்தில் பிள்ளைக்கு ஆயில்ய நக்ஷத்திரமும் பெண்ணுக்குச் செவ்வாய் தோஷமும் சேர்ந்து கொண்டிருந்தன. அதன் பலனாகத்தானோ என்னமோ மணம் முடிந்த மறு வருஷம் மாமியார் மாப்பிள்ளை இருவருமாக விண்ணுலகம் போனார்கள். அதோடு, பெண், தகப்பன் இருவருடைய வாழ்வும் அஸ்தமித்தது.

இரண்டாம் பிழை அவருடைய இரண்டாம் மனைவியால் ஏற்பட்டது. "இந்தப் பிராமணனுக்கு ஏன் இப்படி புத்தி கெட்டுப் போகவேண்டும்?", "வந்தவள் ஏதோ சொக்குப் பொடி போட்டுவிட்டாள்!" என்றெல்லாம் ஊரார் வாயைக் கிளறும்படி மறு விவாகம் செய்து கொண்டு தொலைத்தார். அதன்பின் சாஸ்திரிகள் கட்டின பசுவைப் போலவும், ஸரஸ்வதி வீட்டு வேலைக்காரியாகவும் மாறிய அதிசயத்தை ஊரார் கண்கொண்டு பார்த்தார்கள். பிறந்தகத்தில் ஸரஸ்வதி எந்தவித ஆபரணத்தையும் பெற வில்லை. ஓயாத உழைப்பு, ஏழ்மை உடை, திட்டு, பட்டினி, அடி, சூடு இவைகளால் கோர்த்த ஓர் துன்பச் சங்கிலியே அவளுடைய இளமை நாட்களை ஞாபக மூட்டும் ஆபரணம். 'அறுத்துப் போனவள்', 'வாழாவெட்டி' என்று காகம்மாள் எடுத்ததற்கெல்லாம் சொல்லிக் கொண்டே வர அவ் வார்த்தைகளின் அர்த்தத்தைக் கூடப் புரிந்து கொள்ளாத அக்குழந்தையின் உள்ளம் புண்பட்டு ஏங்கியது. அவ்வளவு துன்பங்களுக்கிடையேயும் அடிக்கொருதரம் அன்பு ததும்பும் குரலில், "சித்தி, சித்தி!" என்று கூப்பிட்டுக் கொண்டு கூடமாட அவளுக்கு ஒத்தாசை செய்து வந்தது மிகவும் ஆச்சரியமாய்த்தா னிருந்தது.

எல்லாவற்றையும் அனுபவித்துப் பார்த்த சாஸ்திரிகளுக்கு வாழ்க்கையில் கசப்பு ஏற்பட்டு, சமூக சீர்திருத்தத்தில் ஊக்கம் தோன்றத் தொடங்கியது.

வீட்டில் சித்திக்கும் பெண்ணுக்குமிடையே குடிகொண்டு வந்த ரஸாபாஸமான நிலைமையையும் ஸரஸ்வதியின் பிற்கால க்ஷேமத்தையும் உத்தேசித்து அவர் அவளை மேற்படிப்புக்காகச் சென்னைக்கு அனுப்பினார். மனைவியிடம் அவர் விதவா விவாக விஷயமாகப் பிரஸ்தாபிக்கவே, காகம்மாள் நாகம் போல் சீறி, "அந்த மூதேவிக்கு மாதா மாதம் பணம் அனுப்புவதே தண்டம் என்று நான் அடித்துக்கொண்டு வரும்போது, நீங்கள் எந்தத் தைரியத்துடன் என்னிடம் வந்து அவள் கல்யாணத்துக்குப் பணத்தை அவிழ்த்து வை என்கிறீர்கள். எல்லாம் வயது வந்தால் இந்தக் காலத்துக் கழுதைகளைப் போல் யாரையாவது இழுத்துக் கொண்டு போகட்டுமே!" என்றாள்.

ஆனால் சுசிலாவுக்கு மட்டும் அக்காவிடம் உயிர். "அக்காவுக்குக் கல்யாணம் ஆகாமல் நானும் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை!" என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தாள்.

நிலைமை இப்படியிருக்கும் போதுதான் அந்த ரஸாபாஸமான செய்தி வந்து சேர்ந்தது. — ஸரஸ்வதி யாரிடமோ காதல் கொண்டு விட்டதாக ஒரு செய்தி. பிரம்மதேவ சாஸ்திரிகள், "சிவ, சிவா!" என்று காதைப் பொத்திக் கொண்டார். அகத்தில் அதிகார வர்க்கத்தின் ஆர்ப்பாட்டமும் அதிகரித்தது.

ஸரஸ்வதிக்கென்று சாஸ்திரிகள் எழுதி வைத்திருந்த திருமணப் பத்திரிகைகூட ஈவிரக்கமின்றித் துண்டாக்கப்பட்டது.

## 3

கிழித்த கடிதத் துண்டுகளுடன், பல்லைக் கடித்துக்கொண்டு காகம்மாள் கனவேகமாகச் சமையலறையை நோக்கிப் போனாள். அடுப்பின்மேல் ஆறிக் கிடந்த சுக்கு வெந்நீரைக் கீழே இறக்கி வைத்துவிட்டு உள்ளே கூர்ந்து கவனித்தாள். அடுப்புக்குள் இரண்டொரு தணல்கள் சாம்பல் போர்வைக்குள் மறைந்து கிடந்தன. அடுப்பை ஊதியதில் சாம்பல் கண்ணுக்குள் பிரவேசித்து விட்டது.

கண்ணைக் கசக்கியபடி கையிலிருந்த காகிதத் துண்டுகளை அடுப்புக்குள் எறிந்

தான். சிறிது நேரத்திற்கெல்லாம் புகைச்சல் அசாத்தியமாகக் கிளம்பியது.

அப்போது கொல்லைப் புறத்திலிருந்து புஷ்பங்களைக் கை கொள்ளாமல் ஏந்திக் கொண்டு ஓடி வந்த சுசீலா, "என்ன அம்மா, அடுப்பு புகைகிறது?" என்று கேட்டாள். நாகம்மாள் சட்டென்று அடுப்பை மறைத்துக் கொண்டு, "ஒன்றுமில்லை, போடி! கல்யாணத்துக்கு எண்ணிப் பத்து நாட்களைக் காணோம்; அந்த ஆர்மோனியத்தைத் தொட்டுப் பார்த்தால் என்ன கெட்டுப் போகுமாம்? போய் எடுத்து வைத்துக் கொண்டு வாசி. கண்ணேல்லியோ!" என்றாள்.

சுசீலா கோபத்தாலும் நாணத்தாலும் சிவந்த முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டாள். அப்போது வாசல் பக்கம் தபால்காரன் தென்படவே, புஷ்பங்களை இறைத்துக் கொண்டு வாசலுக்கு ஓடினாள்.

அவள் மறைந்தவுடன் நாகம்மாள் அடுப்புப் பக்கம் திரும்பி எரிபடாத பாகங்களை நெருப்புக்குள் தள்ளிவிட்டு, சூடு பட்ட கையை ஊதிக்கொண்டு, தள்ளாடி எழுந்திருந்து மறுபடியும் விசிப்பலகைக்கு வந்து படுத்துக் கொண்டாள்.

தேக அசௌக்கியம் ஒருபுறமும், அலைந்த சிரமம் மற்றொரு புறமுமாகப் பற்றி விழுந்தன. அசதி நிறைந்த கொட்டாவி யொன்று விட்டாள்.

"கெட்டுப்போனவளை இந்தக் கல்யாணத்துக்குள் அண்ட விடுவதாவது? அவள் வராமலேயே கல்யாணம் நடக்கிறதா இல்லையா பார்த்து விடுகிறேன்" என்று கருவிக் கொண்டு மற்றொரு கொட்டாவியும் விட்டு ஓய்ந்தாள்.

## 4

உண்மையில் அந்தக் கல்யாணம் ஸரஸ்வதி வராமலேயேதான் நடந்தது. விவாகத் தகவலே அவளுக்கு எட்டாதபடி செய்து விட்டதில் நாகம்மாளுக்கு உள்ளூறப் பெருமையும் திருப்தியும் ஏற்பட்டது.

"பார்த்தீர்களா, உங்கள் பெண் சவரணையை! ஒரே தங்கையின் கல்யாணமாச்சே என்று அவளுக்குக் கடுகளவு அக்கறை யிருந்ததா? நான் மன்றாடிய போது உங்கள் காதில் ஏறிற்றா? இப்போதாவது கையைக் கழுவுங்கள்" என்றவாறாக அவள் கரைத்துப் புகட்டிக்கொண்டே வந்து சாஸ்திரிகளின் மனத்தைக் கெடுத்தாள். அவள் போதனையில் மயங்கிய சாஸ்திரிகள் சுசீலாவைத் தவிர தனக்கு இன்னொரு புத்திரியுண்டு என்பதையே மறந்தார். அதற்கேற்றாற்போல் ஸரஸ்வதியைப் பற்றி அதன் பிறகு அவர்கள் ஒன்றுமே கேள்விப்படவில்லை.

சென்னையில் 'பிராக்டீஸ்' வைப்பதற்கென்று மாப்பிள்ளை ஈசுவரன் விவாகமானவுடனேயே பெண்ணை அழைத்துச் சென்று விட்டான். சுசீலா புக்ககம் போய் விளையாட்டுப்போல் கிட்டத்தட்ட இரண்டு வருடங்கள் சென்று விட்டன. சுசீலாவுக்கு



ஒரு பெண் குழந்தை பிறந்ததாக அறிந்ததும், நாகம்மாளும் சாஸ்திரிகளும் பூரித்துப் போனார்கள். ஆனால் அந்தச் சந்தோஷம் நீடித்து நிற்க அவர்கள் கொடுத்து வைக்கவில்லை. பேத்தியை அளித்த ஈசுவரன் பெண்ணை இவ்வுலகத்தினின்றும் வெளியேற்றினான். பிரஸவமான பதினைந்தாவது நாள் கஸிவா ஆஸ்பத்திரியிலேயே மரண மடைந்ததாகத் தந்தி வந்து சேர்ந்தது.



உத்தரத்திலிருந்து விறகெடுக்க நாகம்மாள் ஏணியேறிப் போயிருந்த சமயம் பார்த்து சாஸ்திரிகள் பரபரப்புடன் ஓடி வந்து தந்தி சமாசாரத்தை உடைக்கவே, அவள் மயக்கம் போட்டு மேலே யிருந்து விழுந்தாள். அதோடு அவளுடைய நிலைமையைக் கவனிக்கும் பொறுப்பும் சாஸ்திரிகள் தலையில் விழுந்தது.

மறுபடி நாகம்மாளுக்கு உடம்பு தேறி, சென்னைக்குக் கிளம்பும் யோசனையைக் கைக்கொள்வதற்குள் ஏறக்குறைய ஒருமாத காலம் ஓடிப் போயிற்று. திக்கற்றதாக விடப்பட்ட அச் சின்னஞ் சிறு சிசுவைப் போய்ப் பார்த்தாக வேண்டும். தாயை இழந்த அக் குழந்தையை இனிமேல் தாங்களே பரிபாலித்து வரவேண்டும் என்ற ஆவலும் பொறுப்பும் அவர்களைச் சென்னைக்குத் தள்ளின. ஆனால் எந்த வேளையில் அவர்கள் கிளம்பினார்களோ தெரியவில்லை. அந்தப் பிரயாணம் ஏக விபரீதமாக முடிந்தது. டாக்டர் ஈசுவரன் பத்து தினங்களுக்கு முன்பு மறு விவாகம் செய்துகொண்டு ஊரை விட்டுப் போய்விட்டதாகக் கேள்விப்பட்டு, மனம் இடிந்துபோய்த் திரும்பி வந்து உட்கார்ந்து விட்டார்கள். ஈசுவரனின் இந்த விதமான நடத்தை அவர்களுக்குப் பிடிபடவுமில்லை; பிடிக்கவு மில்லை.

பாவம்! அந்தப் பச்சைக் குழந்தை இப்போது எங்கே கிடந்து தவிக்கிறதோ? வந்தவள் அக்குழந்தையைக் கண்ணுங் கருத்துமாக நடத்த வேண்டுமே! எப்படி நடத்துகிறாளோ? தான் ஸரஸ்வதியை நடத்தி வந்தது போல் நடத்துகிறாளோ?......ஒருவேளை ஸரஸ்வதி விஷயத்தில் நாம் ஏதேனும் பிசகி விட்டோமோ?......இவ்விதமான புது விசாரங்கள் நாகம்மாளின் மனதை அரித்துக் கொண்டிருந்தன. அதன் பிறகு அவளுக்குச் சரியானபடி ஊணுறக்கமே கிடையாது. அடிக்கடி தலைவலியும் காய்ச்சலும் வந்து கொண்டிருக்கும். சாஸ்திரிகளும் ஏதோ பித்துப் பிடித்தவர் போல் உலாவி வந்து கொண்டிருந்தார். ஒரு வருஷ காலம் ஒரு யுகமாகக் கழிந்தது.

அன்று சனிக்கிழமை. சாஸ்திரிகள் கச்சேரியை விட்டுச் சற்று சீக்கிரமாகவே வந்து விடுவது வழக்கம். ஆனால் அன்று மட்டும் ஏனோ அப்படி வரவில்லை. நாகம்மாள் கணவனைக் கச்கியபடி டிபனுக்காக வெங்காயம் நறுக்கிக் கொண்டிருந்தாள். வாசலில் ஏதோ வண்டி வந்து நின்ற சத்தம் கேட்டது. ஒரு கையில் கூஜாவுடனும் இடுப்பில் குழந்தையுடனும் வண்டியை விட்டு இறங்கியது ஸரஸ்வதி.

"இவளெங்கே இங்கு வந்தாள்? ஒருவேளை இவர் கடிதம் எழுதினாரோ? வரட்டும்..." என்று எண்ணமிட்டுக் கொண்டு முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, முகவாய்க் கட்டையில் கை வைத்துக் கொண்டு நாகம்மாள் ஒரு ஓரமாக ஒதுங்கி நின்றாள். மலர்ந்த முகத்துடன், "சித்தி!" என்று அன்பொழுகக் கூப்பிட்டுக் கொண்டு உள்ளே வந்தாள் ஸரஸ்வதி.

அவள் வந்து வெகு நேரம் வரை நாகம்மாள் ஒன்றுமே பேசாமலிருந்து விட்டு முடிவில் சாவதானமாக, "என்னடி விசேஷம்?" என்று கேட்டாள்.

"உங்களை யெல்லாம் பார்த்து ரொம்ப நாளாகிவிட்டது, சித்தி!" என்றாள் ஸரஸ்வதி கலகலப்பாக.

நாகம்மாள் ஒரு வறட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டே, "இத்தனை நாள் இல்லாது இப்போது திடீரென்று ஆசை வந்ததாக்கும்! ஊர் எங்களைப் பார்த்துச் சிரிக்க, எவனோடேயோ நீ ஓடிப்போக வில்லையா? அவன் இப்போது எங்கே போனானாம்?" என்றாள்.

ஸரஸ்வதியின் வதனம் சட்டென்று களை யிழந்து சோக சாகரத்தில் மூழ்கியது. கண்ணீர் ததும்ப, "அவர் போய்விட்டார். ஒரு மாசமாச்சு" என்றாள். நாகம்மாள் உதட்டைக் கடித்துத் தலையை ஆட்டினாள். "என்றைக்கு நீ உருப்பட்டு வாழ்ந்தது? உன்னை வைத்துக் கொண்ட அத்தனை பேரையும் சாக அடித்தாய். நாங்கள் பாக்கி.

ஒண்டியாய் வருவானேன் என்று ஒரு குழந்தையையும் பெற்றுக் கொண்டு வந்திருக்கிறாய் போலிருக்கிறது!"

"ஆமாம், சித்தி! இது நான் பெற்றெடுத்த குழந்தைதான்!"

"போதுமே, போதும். ஊர் ஏற்கெனவே எங்களைப் பார்த்து ஏளனம் செய்கிறது. நீயும் தாயும் பிள்ளையுமாக வந்து சேர்ந்தாய். இனிமேல் நாங்கள் இங்கு இருப்பதா, ஓடிப் போவதா என்று தெரியவில்லை. ஐயோ, எங்கள் பேரைக் கெடுப்பதற்கென்று எங்கிருந்தோ ஒரு பாவி முளைத்தானே!"

"சித்தி, என்னை எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லுங்கள். அவர் உங்களுக்கு ரொம்பவும் வேண்டியவர். அவருடைய முதல் மனைவி......"

நாகம்மாள் முகவாய்க் கட்டையைத் தோளோடு இடித்துக் கொண்டாள். "இந்த லட்சணத்தில் முதல் மனைவிகூட உண்டா?" என்ற அர்த்தம் அதில் தொனித்தது.

"தங்கை கமலா தேவிதான் அவருடைய முதல் மனைவி, சித்தி!"

"என்ன சொன்னாய்? என்ன? என் மாப்பிள்ளை ஈசுவரனா?"

நாகம்மாள் திடுக்கிட்டாள். மூளை சிந்திக்கும் சக்தி இழந்து குழம்பிற்று. உள்ளத்தில் விவரிக்க முடியாத ஒரு வேதனை கிளர்ந்தெழுந்தது.

நாகம்மாளின் பார்வை ஒருகணம் சந்தேகத்துடன் அக் குழந்தையின் மேல் விழுந்தது. அதே சமயம் ஸரஸ்வதி எதனாலேயோ நடுங்கினாள்.

நாகம்மாள் நீட்டிய கைகளுடன் வாத்ஸல்யமே உருவாகக் குழந்தையை நெருங்கினாள். குழந்தை வர மறுப்பதுபோல் திரும்பித் தன் அன்னையை அணைத்துக் கொண்டது.

ஏமாற்றமடைந்த நாகம்மாளின் சமிக்ஞையை அறிந்து கொண்டு ஸரஸ்வதி தன் சரிதையைச் சொல்லலானாள்:

## 5

நான் காலேஜில் படித்துக் கொண்டிருந்த போது பல மாதங்கள் சேர்ந்தாற் போல் எனக்குப் பணமே வருவதில்லை. அப்பாவுக்கும் இப்படி மனது வந்தது எனக்கு ஆச்சரியமாய்த்தா னிருந்தது. அப்போதெல்லாம் நான் அனுபவித்த கஷ்டங்கள் ஈசுவரனுக்குத்தான் தெரியும். அப்படித் தவித்தபோது என்னுடைய நிலைமையைக் கண்டு இரங்கி எனக்கு உதவியளித்த உத்தமர் ஒருவர் உண்டு. அவர்தான் கமலாவின் கணவர். அப்போது அவர் பிரம்மச்சாரியாகத்தா னிருந்தார். என்னோடு படித்துக் கொண்டிருந்தார். என்னை எந்நாளும் பார்த்துக் கொண்டிருப்பதே பெரும் பாக்கியமாகக் கருதிக் கல்யாணமே வேண்டாமென்றிருந்தார். அவருடைய அளவற்ற அன்பு எனக்குச் சில சமயம் தொந்தரவளித்தது. கோபத்துடன், "நான் விதவை" என்று சொல்லி அவரைப் புறக்கணித்தேன்.

பரீட்சை முடிந்து அவர் சென்னையை விட்டுச் சென்றதும் நான் திக்கற்று நின்று பணக் கஷ்டத்தினால் படிப்பை நிறுத்தினேன். முடிவாக ஒரு ஆஸ்பத்திரியில் என்னைச் சாதாரண நர்ஸாக நியமித்துக் கொண்டார்கள்.

நான்கு மாதங்கள் கழிந்து ஒரு நாள் நான் கடற்கரைப் பக்கம் நடந்து கொண்டிருந்தபோது, திடீரென்று "அக்கா!" என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடிவந்து கமலா என் தோள்களை ஆசையுடன் கட்டிக் கொண்டாள். "அக்கா, நீ ஏன் என் கல்யாணத்துக்கு வரவில்லை? சொல்லேன். என்மேல் என்ன கோபமா?" என்றாள். நான் ஆச்சரியப் பட்டேன். "கமலா, நிஜமா உனக்குக் கல்யாணம் ஆச்சா? எப்போ ஆச்சு? எனக்குத் தெரிவிக்கவேயில்லையே! கல்யாணப் பத்திரிகைகூட அனுப்பவில்லையே!" என்றேன். "நிஜமா, உனக்குப் பத்திரிகை வரவில்லையா? ஐயோ, அவாள் அனுப்பவில்லையோ? அக்கா! நீ வராமல் எனக்குக் கொஞ்சமும் சந்தோஷமே யிருக்கவில்லை — அதோ அவர் வருகிறார்" என்றாள். நான் பார்த்தேன். அப்படியே பேச்சு மூச்சடைத்து நின்றேன். ஆம்; அவர்தான். அவர் என்னைப் பார்த்ததும் திடுக்கிட்டு நின்று விழித்தார். அப்



டாக்டர் (நோயாளியிடம்) :— இந்த யுத்த காலத்திலே காதிலே விழுகிறது எதையுமே நான் நம்புகிறது இல்லே!

புறம் கடற்கரையையே பார்த்துக் கொண்டிருந்தார். துக்கம் தொண்டையை அடைக்க, உடம்பு கொதிக்க நான் ஆஸ்பத்திரிக்குத் திரும்பிச் சென்று படுத்துக் கொண்டேன்.

அப்புறம் இரண்டொரு தரம் அவரைக் கவனிக்க நேர்ந்ததில் அவர் களையிழந்து காணப்பட்டார். சசிலா எப்போதும் போல் சிரித்துக் கொண்டு என்னை "வா, வா" என்றழைத்துக் கொண்டிருந்தாள். நான் ஆஸ்பத்திரியை விட்டு நகரவே யில்லை. என் சசிலாவின் சுகமே எனக்குப் பெரிதெனப் பட்டது.

ஒரு வருடம் கழித்துப் பிரசவத்துக்காக, சசிலா ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தாள். நான் அருகிலிருந்து சிச்ருஷை செய்தேன். பெண் குழந்தை பிறந்தது. ஆனால் தாயாரின் நிலைமை கவலைக் கிடங் கொடுத்தது. பதினைந்தாவது நாள் டாக்டர்களும் கையை விரித்து விட்டனர்.

கடைசியாக ஒரு முறை பிரக்ஞை வந்த போது, சசிலா குகைக்குள்ளிருந்து அழைப்பதுபோல் என்னைக் கூப்பிட்டாள். அன்புடன் என் கரத்தை ஸ்பரிசித்தாள்.

"அக்கா! உன்னிடம் என்னமோ பேச வேண்டுமென்று என் உள்ளம் துடிக்கிறது. இத்தனை நாளாக நீ கல்யாணமே செய்து கொள்ளாமலிருப்பது என் மனத்தை வருத்திக் கொண்டிருந்தது. அப்பாவின் கெட்ட பெயரைப் போக்கி, உன் வாழ்க்கையின் மகிழ்ச்சியை நீ தேடிக் கொண்டு சுகமாக ஜீவித்து வருகிறாய் என்ற திருப்தி யடைந்து உயிர் நீக்க நான் கொடுத்து வைக்கவில்லை. ஆமாம், அக்கா! இன்னும் எவ்வளவு நேரம் நான் உயிரோடிருப்பேனோ தெரியவில்லை."

சசிலா சிரமத்துடன் தலையை மறு பக்கம் திருப்பித் தன்னை இவ்வளவு நேரமும் குனிந்து அவளுடன் உற்று நோக்கிக் கொண்டிருந்த தன் கணவனைப் பார்த்தாள். — "உங்களிடமும் நான் இதைச் சொல்ல வேண்டும். ஆமாம்; என் வாழ்க்கை முடிவடைந்து விடுகிறது. இச் சிறு குழந்தையின் பாசம் மட்டும் எனக்குச் சாந்த மரணத்தைத் தராதென்றே தோன்றுகிறது. அதனுடைய எதிர்காலப் பராமரிப்பைக் கருதி நான் உங்களிடம் ஒரு வாக்குறுதி பெற வேண்டும். இதோ, பாருங்கள். இவள் என் அருமை அக்கா ஸரஸ்வதி. விதவையாகக் காலங் கழிக்கிறாள். என் குழந்தையைப் பாதுகாக்கத் தகுந்த தேவதை இவள் தான். மனம் ஒன்றுபட்டு நீங்கள் இருவரும் மணம் செய்து கொள்கிறோம் என்று சொல்லுங்கள். என் ஆத்மா சாந்தி யடையும்" என்று எங்களிருவரது கரங்களையும் பற்றித் தன் மார்பகத்தின் மேல் பிணைத்துக் கொண்டாள் சசிலா. அப்போது எங்களிருவருக்கும் மானசீகமாக தெய்விகமான மணம் நடந்தேறியது. வதனத்தில் புன்னகை அரும்ப, கண்ணிமையில் அவ் வுயிர் இப் பூவுலகை நீத்துச் சென்றது.

ஆனால் என் ஜாதக விசேஷம் நான் ஒரு வருஷம்கூடச் சுக வாழ்க்கை நடத்தக் கொடுத்து வைக்கவில்லை. என் தலையெழுத்து அவ்விதமிருந்தது. சசிலாவைத் தொடர்ந்து அவரும் போய்விட்டார்.

இந்த ஒரு வருடமாக இந்தக் குழந்தையை நான் ஒரு கண நேரங்கூடப் பிரிந்திராமல் என் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்திருக்கிறேன். இதைப் பார்க்கும்போதெல்லாம் சசிலாவைப் பார்ப்பதுபோலவே இருக்கும். "அம்மா!" என்று தன் மழலைச் சொல்லில் இது என்னை அழைக்கும் போதெல்லாம் இவ்வுலகை மறந்து ஆனந்த சாகரத்தில் என் உள்ளம் ஆழ்ந்து கிடக்கும். என் வயிற்றில் இது பிறக்காத குறைதான். ஆனால் பகல் முழுதும் என் மார்பருகேயே இருத்தி, புட்டிப் பாலைக் கொடுத்து, இரவு முழுதும் இமை கொட்டாமல் என் செல்வத்தை என் மடியிலேயே படுக்க வைத்து, என் வாழ் நாட்களைப் பேரின்பமாகக் கழித்து வந்திருக்கிறேன். இப்படிப்பட்ட என் குழந்தையை, கனவிலும் பிரிந்திராத என் கண் மணியை, என்னிடமிருந்து பிரித்து வைத்தால் என் உயிர் போய்விடாதா? அல்லது, அதுதான் என்னைப் பிரிந்து உயிர் தரித்திருக்குமா? முடியாது; எங்களைப் பிரிக்கவே முடியாது. இது என் வயிற்றில் பிறக்கவில்லை; ஆனாலும் இது என் குழந்தை.......

* * *

அவளுடைய கண்ணீர் அக்குழந்தையின்மேல் பெருக்கெடுத் தோடியது. குழந்தை அண்ணாந்து பார்த்துத் தன் குஞ்சுக் கைகளால் அன்னையின் கண்ணைத் துடைத்தது.

இந்தப் பரிதாபக் காட்சியை நாகம்மாளால் பார்க்க இயலவில்லை. அவள் உள்ளத்தின் அடிவாரத்தில் ஒரு உத்வேகக் கிளர்ச்சி மூண்டெழுந்து மனதையும் உடலையும் உருக்கி, துக்கம் துக்கமாக வெளியேறியது. அழுது கொண்டே, "சசிலா!" என்று கூப்பிட்டுக் கொண்டு அவளை நெருங்கினாள் நாகம்மாள்.

## 6

நித்திரை கலைந்து நாகம்மாள் எழுந்திருந்தபோது புத்துயிர் பெற்றெழுந்தது போலிருந்தது. நீர் வீழ்ச்சியைப் போன்ற

'ஹோ' வென்ற பேரிரைச்சல் செவிக்குள் உற்பத்தியாகியிருந்தது. அந்தப் பேரிரைச்சலையும் ஊடுருவிக்கொண்டு ஒரு விம்மலின் தொனி செவியுள் பாய்ந்தது. கனவில் கேட்ட அழுகுரல் இப்படியும் ஒலிக்குமா?

தலையணை ஒரு புறம் சாய்ந்து கிடந்தது. முற்றத் தோரமாகக் காய்ந்து கொண்டிருந்த கடும் வெய்யில் இளம் வெய்யிலாக மாறிச் சுவரேறி ஓர் ஆள் உயரத்துக்கு மேல் போய் விட்டது. நாகம்மாள் எழுந்திருந்து திட சங்கல்பத்துடன் நேராக 'காமரா' உள்ளை நோக்கி நடந்து சென்றாள்.



தாய்ப் பசு (கன்றுக் குட்டியிடம்):—சீச்சீ, அது புல் இல்லை: குஞ்சலம்!

உள்ளே நாற்காலியில் பிரதி பிம்பம்போல் உட்கார்ந்திருந்த சுசீலாவை முதுகுப் புறமாக அணுகித் தொட்டாள். திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்த சுசீலாவின் முகம் ஏனோ அழுது வடித்துக் கொண்டிருந்தது. கண்கள் கலங்கிச் சிவந்திருந்தன. நாகம்மாள் ஒரு கண நேரம் தயங்கினாள்.

“சுசீலா! உன்னை ஒன்று கேட்க வேண்டும் — உனக்கு இந்தக் கல்யாணம் அவசியமா?”

விவரிக்க வொண்ணாத சந்தேகத்துடன் சுசீலா அம்மாளைக் கூர்ந்து கவனித்தாள். அப்போதே அவளுடைய அழுகையும் அதிகமாயிற்று.

“அவசியம் என்று எப்போதாவது இஷ்டப்பட்டேனா? ஐயோ! இனிமேலும் அப்படி இஷ்டப்பட முடியுமா? அம்மா, இதைப் படியேன்” என்று ஒரு கடிதத்தை அம்மாவிடம் நகர்த்தி விட்டு, சுசீலா முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

கடிதம் ஸரஸ்வதியால் எழுதப்பட்டிருந்தது. அக் கடிதத்தை நாகம்மாள் ஆரம்பத்திலிருந்து படிக்கவில்லை. திடீரென கண்ணில் விழுந்த அவளுடைய பார்வை கருத்துக்களின் சுழலில் சிக்கி, சிறிது தூரம் இழுக்கப்பட்டுச் சென்று திடுதிப்பென்று நிறுத்தப்பட்டது.

“......வாழ்க்கையில் சமூக விதிகளுக் குட்பட்டு அடையும் இன்பந்தான் குற்ற மற்றது. ஆனால் என் வாழ்க்கை, நான் தெளிந்த அறிவெய்து முன்னமேயே முடிவடைந்து விட்டது.

இரண்டாம் முறையாக என் பெற்றோருக்குப் பொருள் நஷ்டம் கொடுக்க என் மனம் துணியவில்லை. அதைவிடக் கல்யாணமே எதற்கு என்று தோன்றி விடுகிறது. ஆனால், சுசீலா, இத்தனை நாளாக என்னிடமிருந்த இந்தத் திட சங்கல்பம் அழிந்து விடும்போலிருக்கிறது. அந்தரங்கமாகச் சொல்கிறேன்: என்னுடன் படித்துக் கொண்டிருக்கும் ஈசுவரன் என்னிடம் அன்பு கனியப் பேசும்போது என் மன உறுதி தளர்ந்து விடுகிறது............”

நாகம்மாள் சிரித்தாள்; அதற்கு மேல் அவள் படிக்கவில்லை.

அன்று மாலை அடுப்பு மூட்டுவதற்காக நாகம்மாள் சமையலறைக்குப் போய் அடுப்பைக் கிளறிப் பார்த்ததில், அந்தக் காகிதக் கரிச் சாம்பலுக்கு நடுவில் எரிபடாத சிறு பாகமொன்று அகப்பட்டது. அதை ஊன்றிக் கவனித்ததில், “ஸரஸ்வதி” என்ற வார்த்தை மட்டும் அதில் காணப்பட்டது.

அந்த வார்த்தையே, இனிமேல் அச்சிட வேண்டிய திருமணப் பத்திரிகைக்கு எந்தப் பெயர் சுபசூசகமானது என்பதைக் கூறியது. பிரம்மதேவன் எழுதிய தலையெழுத்தை அக்கினி தேவனும் அழிக்கவில்லை!

# நான்கு வினாடிகள்!

வி. எஸ். ஆர்.

"மிஸ்டர் ரகுநாதன்! இப்படிக் காரியம் செய்தால் எதற்கு உருப்படும்? விசை இல்லாமல் இந்தக் குண்டுகள் எங்கேயாவது வெடிக்குமா?" என்று மேலதிகாரி கோபித்துக் கொண்டார். அந்த அதிகாரிக்கு எதிரில் ஏழு கனத்த வெடி குண்டுகள் சாய்ந்து கிடந்தன.

ரகுநாதனுக்குக் கல்கத்தாவுக்கு அருகில் ஒரு வெடிகுண்டு தொழிற்சாலையில் வேலை. தயாரான வெடி குண்டுகளைப் பரீட்சை செய்து பார்த்து அவற்றில் ஒரு ரகசிய விசையைப் பொருத்துவதற்காக அவனை நியமித்திருந்தார்கள். அந்த விசை இருந்தாலொழிய வெடி குண்டுகள் கீழே விழுந்தும் வெடிக்க முடியாது.

மேலதிகாரி தன்னைக் கோபித்துக் கொண்டபோது ரகுநாதனுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போலிருந்தது. இதுவரை யாரும் அவனுடைய வேலையில் குற்றம் கண்டு பிடித்தது கிடையாது.

இந்தத் தவறுக்குக் காரணம் ஸ்ரீமதி கமலா. கமலா அவனுடைய மாமா பெண். கல்கத்தாவில் இருந்தாள். அவளிடமிருந்து அவ்வப்பொழுது அவனுக்கு வந்த கடிதங்கள் அவனைப் பைத்தியமாக அடித்துக்கொண்டிருந்தன. அன்று காலையில்தான் அவனுக்கு அந்த முக்கியமான செய்தி வந்தது. தை மாதத்திலேயே ஸ்ரீமதி கமலாவுக்கும் ரகுநாதனுக்கும் கல்யாணத்தை முடித்துவிட அவள் தகப்பனார் சம்மதித்து விட்டதாக கமலா எழுதியிருந்தாள். இந்த இன்பக் கிளர்ச்சியில் அவன் வேலையில் கவனமில்லாமல் வெடி குண்டுக்கு விசை வைக்க மறந்து விட்டான்.

சித்திரை பிறந்ததும் முகூர்த்த நாள் குறித்தாயிற்று. பத்து நாள் லீவ் எடுத்துக் கொண்டு ரகுநாதன் கல்கத்தாவுக்குக் கிளம்பினான். முகூர்த்தம் வெகு விமரிசையாக நடந்தேறியது.

ஒரு நாள், ரகுநாதன் கமலாவை அழைத்துக் கொண்டு கல்கத்தாவில் பார்க்க வேண்டிய பல இடங்களுக்குப் போனான். அன்று சாயங்காலம் அவன் சினிமா பார்த்து விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது எதிர்பாராத ஒரு விபத்து நேர்ந்தது.

திடீரென்று அபாய அறிவிப்புச் சங்கு அலறிற்று. ஜனங்கள் 'ஷெல்டர்'களுக்குள்ளும் வீடுகளுக்குள்ளும் போய் ஒளிந்து கொண்டார்கள். ரகுநாதனும் கமலாவும் அப்பொழுது ஒரு பார்க்கின் அருகில் வந்து கொண்டிருந்தார்கள். சமீபத்தில் கட்டிடங்களே இல்லை; ஷெல்டர்களும் அருகில் காணோம். ரகுநாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை. "கமலா! அந்தச் செடிக்குள்ளாவது பதுங்கிக் கொள்வோம்! கண்ணை இறுக மூடிக்கொள்!" என்று கூறி அவளைப் பற்றி அருகிலுள்ள புதருக்குள் மறைத்து விட்டுத் தானும் ஒளிந்து கொண்டான்.

சிறிது நேரத்திற் கெல்லாம் ஜப்பானிய விமானங்கள் ஆகாயத்தில் வட்டமிடும் சத்தம் கேட்டது. இதைத் தொடர்ந்து வெடி குண்டு வெடிக்கும் சத்தமும் விமான எதிர்ப்புப் பீரங்கிகளின் அலறலும் கேட்டன. 'வீல்' என்று ஓலமிடும் சத்தம் எங்கிருந்தோ கிளம்பி, பலமாக இன்னும் பலமாக, அவர்களை நோக்கி வந்துகொண்டிருந்தது.

மறுகணம் 'பொத்'தென்று ஒரு குண்டு அவர்களுக்கு நாலு அடிக்கு அப்பால் வந்து விழுந்தது!

ரகுநாதனும் கமலாவும் கண்களை மூடிக் கொண்டு, மூச்சைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களுக்கு உயிரே போய் விடும் போலிருந்தது. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு.........வினாடிகள்! நாலு யுகங்கள் மாதிரி தோன்றின. குண்டு இன்னும் வெடிக்காததைப் பார்த்து விட்டு, ரகு மெதுவாகத் தலையைத் தூக்கி



னான். சிவா அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். சரு குண்டைக் கூர்ந்து கவனித்தான்.

"பிழைத்தோம்!" என்று கூவினான் சரு!

"சிவா! குண்டு வெடிக்காது! இந்த குண்டு வெடிக்கிறதாயிருந்தால் இதற்குள் வெடித்திருக்க வேண்டும்; எழுந்திரு" என்றான் அவன் குதூகலத்துடன்.

இருவரும் எழுந்து நின்று கொண்டு பரபரப்போடு அந்த வெடிக்காத குண்டையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

"இது வெடிக்காது என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றான் சிவா.

ஆனால் சருவின் காதில் அவன் கேட்டது விழவில்லை. "மிஸ்டர் சருநாதன்! இந்தக் காரியம் செய்தால் எதற்கு உருப்படும்? விசையில்லாமல் எந்த குண்டாவது வெடிக்குமா?" என்று சில நாட்களுக்கு முன் மேலதிகாரி அவனைப் பார்த்துக் கேட்டது ஞாபகம் வந்தது. "அடடா! அப்படியானால், எதிரி தொழிற்சாலையிலும் ஒரு சருநாதன் இருந்திருக்க வேண்டுமல்லவா? அப்படியானால், அங்கே ஒரு சிவாவும் இருக்க வேண்டுமென்பதில் என்ன சந்தேகம்? இல்லையென்றால், இப்போது நம் அருகில் விழுந்த குண்டு ஏன் வெடிக்கவில்லை?" என்று எண்ணியவாறே சிவாவின் முகத்தை ஆனந்தத்துடன் பார்த்தான்.




## முடிக்கலாம்!

● பத்திரிகை வாசிப்பவர் (புஸ்தகம் படிப்பவரைப் பார்த்து):—என்ன புஸ்தகம் அது? அவ்வளவு அவசரமாக ஒரே மூச்சில் படித்துக்கொண்டிருக்கிறீர்களே?

புஸ்தகம் வாசிப்பவர்:—இதுவா? இந்த யுத்தத்தை 1944-ம் வருஷத்திற்குள் எப்படி முடிப்பது என்பதைப் பற்றிய புத்தகம் இது. யுத்தம் முடிவடைவதற்குள் புஸ்தகத்தையாவது முடித்து விடலாமென்று படிக்கிறேன்.

## அடுத்த வருஷம்!

● ஊருக்குப் போகிறவர்:—சரி; அப்போ நேரமாகிறது; நான் மறுபடியும் உங்களை அடுத்த வருஷம் சந்திக்கிறேன். வரட்டுமா?

மற்றவர்:—அடுத்த வருஷமா? அப்படியென்றால் நீங்கள் ஊரிலிருந்து திரும்பிவர ஒரு வருஷமாகுமா?

ஒருவர்:—இல்லை, ஐயா, இல்லை! நாளைக்கே திரும்பி வந்து விடுவேன்.

# புது வருஷப் பரிசு

ராஜி

ஒரு கிராமத்தில் உள்ள எலிகளுக்கெல்லாம் ஓர் எலி ராஜா இருந்தது. அந்த ராஜா வருஷத்துக்கு ஒருமுறை எந்த எலி தைரியமான காரியத்தைச் செய்கிறதோ, அந்த எலிக்கு ஒரு பரிசு கொடுப்பது வழக்கம். 1945-ம் வருஷத்துப் பரிசு பெறுவதற்குப் பல எலிகள் முயற்சி செய்தன. அதில் ஒரு கிழ எலி பரிசைப் பெறுவதற்கு மிகவும் முயற்சித்தது.

ஒரு நாள் அக் கிழ எலி வெளியில உலாவச் சென்ற பொழுது, அதற்குச் சற்றுத் தூரத்தில் திடீரென்று ஒரு வெள்ளைப் பூனை ஒரு வீட்டின் மாடியிலிருந்து கீழே தொப்பென்று குதித்தது. அதைப் பார்த்த கிழ எலியின் உடல் கடுக்க மெடுத்தது. பூனைக்குத் தெரியாமல் ஒரு மூலையில் பதுங்கி, பூனை என்ன செய்கிறது என்று பார்த்தது.



கீழே விழுந்த பூனை என்ன செய்தது தெரியுமா? கொஞ்சம் கூட அசையாமல் எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது. பூனை அசைவற்று உட்கார்ந்திருப்பதைப் பார்த்த கிழ எலிக்கு ஒரு யோசனை தோன்றிற்று. "நான் ஏன் இந்தப் பூனையை ஏமாந்திருக்கும் சமயம் பார்த்துக் கயிற்றால் கட்டி எலி ராஜாவிடம் கொண்டு போய் நிறுத்தி இந்த வருஷப் பரிசைப் பெறக்கூடாது?" என்று நினைத்தது.

உடனே ஒரு கயிற்றை எடுத்துப் பூனை வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில், திடீரென்று சுருக்கு மாட்டி பூனை உடம்பில் போட்டு இழுத்தது. பூனை 'மியாவ்' என்று கத்திக்கொண்டே எலியின் பக்கம் திரும்பிற்று. உடனே எலி பயந்து பூனையின்



முதுகுப் பக்கத்திற்கு ஓடிற்று. உடனே அதைப் பார்த்த எலியின் குழந்தைகள், "அப்பா, அப்பா! பூனையின் விழிகளைப் பார்த்தாலே பயமாயிருக்கிறது. அதனிடம் 'நெருங்க வேண்டாம்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டன. ஆனால் கிழ எலி கேட்கவில்லை. "எப்படியாவது என் உயிருக்கு ஆபத்து வந்தாலும்கூட இப் பூனையைக் கட்டாமல் விடப் போவதில்லை!" என்று கயிற்றை மறுபடியும் பூனையின் உடலில் ஒரு சுற்றுச் சுற்றிற்று. பூனை எலியின் பக்கம் திரும்பும் பொழுது, மற்றொரு பக்கம் சென்று மறுபடியும் பூனையைக் கயிற்றால் கட்டிற்று. இப்படியும் அப்படியுமாகப் பூனையை ஏமாற்றிப் பூனையின் உடல் முழுவதும் கயிற்றால் கட்டிவிட்டது. பூனையின் வாயையும் கட்டிவிட்டது.

பிறகு சந்தோஷத்தினால் குதித்துக் கொண்டே கயிற்றின் ஒரு நுனியைக்

---

## தானாகப் போட்டது!



உபாத்தியாயர்:— இங்கே பார்! நிஜத்தைச் சொல்லு. இந்தக் கணக்கு தானாகவே போட்டதா? அல்லது, யாராவது சொல்லிக் கொடுத்துப் போட்டதா?

பையன்:— எங்க அப்பா தானாகவேதான் போட்டுக் கொடுத்தார், ஸார்!

# இரு புதிர்கள்




குழந்தைகளே! (1) மேலே காணும் ஏரோப்ளேனில் எது அதிக நீளம்? இறக்கைகள் இரண்டும் சேர்ந்து அதிக நீளமா? அல்லது, வால் அதிக நீளமா? அளந்து பார்க்காமல் சொல்ல வேண்டும். (2) குறுக்கே போட்டிருக்கும் பல கோடுகளுக்கு மேல், இரண்டு கோடுகள் தெரிகின்றன அல்லவா? அந்த இரண்டு கோடுகளில் எது கீழே காணும் தனிக் கோட்டின் தொடர்ச்சி யென்று பார்த்த மாத்திரத்தில் கண்டு பிடிக்கவும். நிச்சயம் ஏமாறுவீர்கள்!

---

கையில் பிடித்துக் கொண்டு அரண்மனையை நோக்கிப் பூனையை இழுத்துச் சென்றது. கிழ எலி தைரியமாகச் செய்த காரியம் காட்டுத் தீபோல் எங்கும் பரவியது. எல்லா எலிகளும் கூட்டம் கூட்டமாக வந்ததே தவிர, கட்டியிருந்த பூனையிடம் நெருங்க ஒரு எலிக்கும் தைரியம் வரவில்லை.

கிழ எலி அரண்மனையை நோக்கிப் பரிசு பெறுவதற்காக ஒரு பெரிய வெள்ளைப் பூனையைக் கட்டி இழுத்து வந்த சமாசாரத்தைக் கேட்ட எலி ராஜாவின் உடல் நடுங்கிற்று. "ஏ, மந்திரிகளே! பூனையுடன் அந்தக் கிழ எலியை உள்ளே விடாதீர்கள். இதோ, இந்தப் பரிசை அந்தக் கிழ எலிக்கு நீங்களே கொடுத்து அனுப்பி விடுங்கள்" என்று ஒரு வெள்ளிக் கோப்பை நிறைய மசால் வடைகளைக் கொடுத்து விட்டு, எலி ராஜா தனக்கென்று பிரத்தியேகமாக வைத்திருந்த வளைக்குள் நுழைந்தார். ஆனால் அதற்குள் கிழ எலி பூனையை இழுத்துக் கொண்டே அரண்மனையை நெருங்கிற்று. எலி மந்திரிகள், "ஏ, கிழ எலியே! உனக்குத்தான் இந்தப் பரிசு!" என்று சொல்லிக் கொண்டே கோப்பையைக் கீழே வைத்துவிட்டு ஓட்டமெடுத்தன.

பரிசைப் பெற்றுக் கொண்ட கிழ எலி, "இந்தக் கட்டின பூனைக்கா இப்படிப் பயந்துகொண்டு ஓடுகிறீர்கள்!" என்று சொல்லிக்கொண்டே பூனையை இழுத்துக் கொண்டு அரண்மனைக்கு வெளியே வந்தது. அங்கு வேடிக்கை பார்க்க வந்த மற்ற எலிகளும் பூனைக்குப் பயந்து ஓட ஆரம்பித்தன. அச்சமயத்தில் அத் தெருக்கோடியில் வசிக்கும் பாலு என்னும் சிறு பையன், "அடாடா! கெட்டுப் போன என் விளையாட்டுப் பூனை இதோ இருக்கிறதே!" என்று பூனையைக் கையிலெடுத்துக் கொண்டான். அதன் மீது கட்டியிருந்த கயிறுகளை அவிழ்த்து விட்டு, அதன் தலையில் விளையாட்டாக ஒரு தட்டுத் தட்டினான்.

ஆனால் அங்கிருந்து தப்பித்த கிழ எலி, "நிஜப் பூனையாயிருந்தாலென்ன, விளையாட்டுப் பூனையாயிருந்தாலென்ன!" என்று சொல்லிக் கொண்டே தன் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் மசால் வடைகளைக் கொடுத்துத் தானும் தின்றது. வெள்ளிக் கோப்பையை எடுத்து அதன் மனைவி பத்திரமாகத் தன் பெட்டியில் வைத்துப் பூட்டிக் கொண்டது.



# வீரர்களை வணங்குவோம்



## இந்தியாவைப் பாதுகாத்த நம் படையினருக்கு வணக்கம் செலுத்துவோமாக

இப்பொழுது ஜப்பானியர் பாதுகாப்புகள் சோதிக்கப்படுகின்றன. அவர்களின் சேனைகள் திருப்பி விரட்டி அடிக்கப்படுகின்றன. இதைச் செய்து முடித்தவர்களுக்கு நாம் வணக்கம் செலுத்துவோமாக.....நமது விடுதலைக்காகப் போராடுகிறவர்களுக்கு வணக்கம் செலுத்துவோமாக! அவர்கள் செய்த வேலை மிக கடினமானது. அதை மிகச் சிறந்த முறையில் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

கொஹிமா காடுகள், பாலெல் மலைச்சாரல்கள், டிடிம் பாதைகள் இப்பெயர்கள் ஒன்றும் இன்று பத்திரிகைச் செய்திகளில் இல்லை. ஆனால் அவைகளை அக்கிரமித்த அவைகளுக்காக சண்டையிட்டு அவைகளை திரும்பக் கைப்பற்றிய வீரர்களின் மனதில் இந்த ஞாபகம் வெகுகாலத்துக்கு இருக்கும்.

சேறும் சகதியும் நிறைந்ததும், விஷ ஜந்துக்களால் பீடிக்கப்படுவதும் விடாத மழையால் சகலமும் நனைந்ததுமான இடத்தில் சாமான்களுடன் சுமைகளுடன் பாதையில்லாத வழியாக இங்கே முன்னேறினார்கள். அவர்கள் எப்படி அதைச் சகித்தனர்? அதை சொல்லி முடியாது. ஆனால் அவர்கள் அதை எப்படியோ சகித்தனர். அது ஒரு பெரும் சகிப்புப் போராட்டம். அதனால்தான், நமது சேனை மகா பிடிவாதக்காரரான ஜப்பானியப் படைகளுடன் போரிட்டு அவர்களைத் தோற்கடித்தனர்.

<u>நாம் ஜப்பானியர்களை தோற்கடிக்க முடியும்</u> என்று ருசுப்படுத்திய நமது படையினருக்கு நாம் வணக்கம் செலுத்துவோமாக.



**நாம் அவர்களைத் திருப்பித் தோற்கடித்து வருகிறோம்**

தேசீய போர்முன்னணியின் பிரசுரம்

AAA 1309—A. TM

**கட்டுப்பாட்டு விலையினால்**

உற்பத்தியாளருக்கு நியாயமான விலை கிடைக்கும். சில்லரை வியாபாரிகளுக்கு நியாயமான இலாபங்கிடைக்கும். நீங்களும் எந்தப் பொருளையும் நியாயமான விலைக்கு வாங்கலாம்.

# மருந்து விற்பனைக் கட்டுப்பாட்டுக் கட்டளை நடத்தப்படும் முறை

ஒவ்வொருவரும் ஓரளவிற்கு மருந்துகள் வாங்குகிறீர்கள். மருந்து விற்பனைக் கட்டுப்பாட்டுக் கட்டளையின் நுட்பங்களை நீங்கள் உணர்ந்துகொள்ளுவதனால் நீங்கள் உங்கள் பணத்தை மிச்சப்படுத்தலாம்.

அதன் விதிகளாவன:-

1. மருந்து வியாபாரிகள் விற்கும் 1700க்கு மேற்பட்ட வகை மருந்துகளும் சில்லரை விலையும் மொத்தவிலையும் இன்னின்ன விலைக்கு அதிகப்படக்கூடாதென இந்தக் கட்டளை நிர்ணயிக்கிறது. இந்த ஜாபிதாவும் விலைப்பட்டியலும், டில்லி, சிவில் லைன்ஸ், பிரசுர மானேஜரிடம் 9 அணா விலைக்கு கிடைக்கும், தபாற் செலவில்லை. இந்த ஜாபிதாவில் இல்லாத மருந்துகள் பொதுக் கட்டுப்பாட்டு விதிகளுக்கு உட்படும். யாராவது அவற்றிற்கு அதிக விலை சொல்லுவதாகச் சந்தேகித்தால் இந்த விதியின் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

2. கட்டுப்பாட்டு விலையைவிட அதிகமாக விற்றாலும் தன்வசமிருக்கும் சரக்கை தகுந்த காரணமின்றி விற்க மறுத்தாலும் அந்த வியாபாரி குற்றஞ்செய்தவராகிறார். ரொக்கந் தந்து கேட்டால் அவர் கொடுக்கவேண்டும். இந்த விதியை மீறுகிறவர்கள் அபராதமோ சிறைத் தண்டனையோ விதிக்கப்படலாம்.

3. பகிரங்க அதிகாரியின் அனுமதிச் சீட்டின்றி யாரும் மருந்து வியாபாரம் செய்யலாகாது. இந்த அறிவிப்பிற்குக் கீழே காணப்படும் சின்னத்தையும் விலைப்பட்டியலையும் அனுமதிபெற்ற கடையில் முக்கியமானதோர் இடத்தில் கட்டித் தொங்கவிடவேண்டும்.

4. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியான மருந்துகளும் உள்நாட்டு மருந்துகளும் இந்தக் கட்டளைக்குட்படும்; ஆனால் யுனானி ஆயுர்வேத மருந்துகள் உட்படமாட்டா.



குறிப்பு:- இவ் விலைகளின்மேல் 100க்கு 5 வீதம் அதிகவிலைக்கு விற்கலாம். சுங்கவரி முதலிய வரிகள் வசூலிக்கப்பட்டிருந்தால், பில்லில் அவற்றைக் குறிப்பிடவேண்டும்.

மருந்துகள் வாங்கு முன்னதாக, உங்கள் வியாபாரியிடமுள்ள கட்டுப்பாட்டு விலைப்பட்டியலைக் கேட்டு வாங்கிப் பாருங்கள். விதிகள் மீறப்பட்டிருந்தால், கட்டுப்பாட்டு விலைப்பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கும் உங்கள் பகுதி லைசென்ஸிங் அதிகாரிக்கு அறிவிக்கத் தவறாதீர்கள்.

## உண்மையை உணர்ந்து உங்கள் உரிமையைக் கேளுங்கள்

நியூ டில்லி கைத்தொழில் சிவில் சப்ளை இலாகா வெளியிட்டது.

AAA 1210 A TM

# பாரதியார் ஞாபகார்த்த நிதி

சென்ற 24-12-44 இதழில் "பத்து ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை" என்று குறிப்பிடப்பட்டிருந்த ரூ. 110—4—0க்கு விவரம்:

ரூ. 7—0—0: ஸ்ரீமதி ஆர். எஸ். ராஜலக்ஷ்மி, மயிலாப்பூர்: ரூ. 6—8—0: சேலம் குகை வீர சைவ கன்னட சைனிகர் சங்கத்தார்; (ஸ்ரீ பி. திருக்கம் மூலம்) ரூ. 5—0—0: ஸ்ரீ ருக்மிணிதபாதம், டில்லி; ஸ்ரீமதி சரோஜினி, கும்பகோணம்; ஸி. கே. குழந்தைசாமி கவுண்டர், பட்டக்காரர் தோட்டம் (ஈரோடு) எஸ். ரங்கநாதன், ஆக்ரா; எம். எஸ். கணேசன், கல்கி ஏஜெண்டு, செட்டிநாடு; ஸ்ரீமதி பத்மா துரைசாமி, கல்கத்தா; ஸ்ரீமதி என். கமலா, பொள்ளாச்சி; ஸி. எல். ராமஸ்வாமி ஐயர், சத்தியமங்கலம்; ஏ. ஜீ. சுப்ரமண்யம், சங்கீத வித்வான், சாத்தூர்; ஏ. வி. ராகவன், கல்கி, சென்னை; "ஜோமாஸ்" கல்கி, சென்னை: எஸ். ஷண்முகம் பிள்ளை, எம். புத்தூர்.

ரூ. 3—8—0: ஸ்ரீமான்கள் கே. வில்வநாதன், பஞ்சாப்; ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் என். என். ஐயர், ஜம்ஷெட்பூர்; ஜி. ராமு, இந்தூர்; என். எஸ். வில்வநாதன், சேலம்; ரூ. 2—12—0: ஸ்ரீமான்கள் வி. எஸ். பாஸ்கர ஐயர், புகலூர்: ரூ. 2—2—0: ஸ்ரீமான்கள் பீமன் — நாராயண.. மதுரை; ரூ. 2—1—0: ஸ்ரீமான்கள் டி. பி. வெங்கடாசலமையர், செகந்தராபாத்; டி. ஆர். ராமஸ்வாமி, செகந்தராபாத்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் கே. வி. சஞ்சீவி செட்டியார், கடுக்கலூர்; இரா. சாம்பசிவம், அருவங்காடு; ரூ. 1—4—0: தலைவர், கிராம முன்னேற்ற சங்கம், சிதம்பர நாதபுரம்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஆர். முத்துசாமி, வண்ணாரப்பேட்டை, (திருநெல்வேலி); டி. எம். பிச்சுமணி, நுங்கம்பாக்கம்; ஸ்ரீமதி எம். செல்லம், குளித்தலை; ஸ்ரீ ஜெ. எஸ். வாஸன், பாண்டிச்சேரி; ஜி. செல்லம், இந்தூர்; எல். நாகப்பா, வேலூர்; ஆர். டி. சாமுவேல், பொறையார்; பி. நரசிம்ம மூர்த்தி, திருச்செந்தூர்; கே. எஸ். வேலாயுதன், குறிச்சி; கோவை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலய சகோதரர்கள்.

ஆக ரூ. 110 4 0

சென்ற இதழில் "அன்பர்கள் மூலம் நன்கொடை மொத்தம்" என்று குறிப்பிட்டிருந்த ரூ. 634—10—6க்கு விவரம்:

பரமக்குடி எம். என். பி. அண்டு கம்பெனி, ஸ்ரீ ஜீ. கோவிந்தன் மூலம்:

ரூ. 18-0-0: சேதுபதி போர்டு ஹைஸ்கூல் உபாத்தியாயர்கள்; ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் சுப்பையா பிள்ளை, கல்கி ஏஜெண்டு; ரூ. 3—0—0: ஜீ. வரதராஜன், ஆ. மகாலிங்கம், என். வி. கே. வில்வநாதன்; ரூ. 2—6—6: ஸ்ரீ கே. பாண்டியன் பிரதர்ஸ்; ரூ. 2—4—0: ஸ்ரீ ரு. இலெ. சிதம்பரம் செட்டியார், ரூ. 2—2—0: பி. ஆர். கல்யாணசுந்தரமையர்; ரூ. 2—0—0: பா. காசிவிஸ்வநாதன், எம். நடராஜன், டி. கே. மணிராஜு பிள்ளை, ஏ. எச். ராஜகோபால், என். என். ஹரிகிருஷ்ணன், ஆர். ரங்கய்யர், ஸி. நா. ராமய்யர் அண்டு வன்னியகுல க்ஷத்திரிய வாலிபர் சங்கம், ஹி. வெ. முத்துராமய்யர் (எமனேஸ்வரம்); ரூ. 1—8—0: க. கருப்பையா கோனார்; ரூ. 1—2—0: முனியசாமி நாயுடு; ரூ. 1-0-0: டி. என். ராகவேலு செட்டியார், ஜெ. தியாகராஜன் செட்டியார், நா. மா. அ. நா. பாலச்சாமி செட்டியார், நவநீத கிருஷ்ணன் செட்டியார், அபுத்தாகிர், எம். செல்லம், மா. சுப்பிரமணியம் செட்டியார், க. தங்கச்சாமி பிள்ளை, நா. பெ. தங்கச்சாமி செட்டியார், எம். வி. சிவசுப்ரமணியம் சேர்வை, பி. கே. கோபால் ராவ், மா. முத்துசாமி, கே. கருப்பையா சேர்வை, பி. எஸ். சாமிநாத பிள்ளை, ஏ. சோமசுந்தரம் பிள்ளை, ஏ. கோபால கிருஷ்ணசாமி பிள்ளை, ஏ. வி. அழகு சொக்கும் பிள்ளை, வி. சுந்தரராஜ ஐயங்கார், பி. எஸ். சுவாமிநாத பிள்ளை, வி. கே. ராஜு, வி. சுந்தரம், மு. செ. முத்திருளன் சேர்வை, நாகஸ்வாமி ஐயர், நா. ஸி. நா. சங்குமுத்து செட்டியார், கே. ராமநாதன், ஆர். அனந்தராம், கே. வி. ராமாச்சாரி, ராம. பா. அண்டு கோ, ஆ. ராம. ஹரிகிருஷ்ணம் பிள்ளை, சொ. பா. நாகசாமி ஐயர், வி. கோவிந்தராமன், கே. என். நாகசாமி ஐயர், ஜி. ஆர். ராமாச்சாரி, ஸி. வெ. குப்புசாமி ஐயர், நீலகிரி ஐ. குப்புசாமி ஐயர், மகாலிங்கமணியம் பிள்ளை, எம். ஆறுமுகம், மு. வைரவன் செட்டியார், நா. க. வெங்கடாசலம் செட்டியார், வி. லக்ஷ்மணப் பிள்ளை, என். ராமசாமித் தேவர், ச. தங்கசாமி முதலியார், செ. சங்கிலி சேர்வை, ரா. சேக. ராமன் செட்டியார், மீ. மு. சண்முகம் செட்டியார், நா. பழ. ராம. செல்லையா பிள்ளை (எமனேஸ்வரம்), ஹி. வெ. கோவிந்தய்யர், (எமனேஸ்வரம்.)

ஆக ரூ. 111—6—6

லாகூர் ஸ்ரீ கே. கஸ்தூரி அவர்கள் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீமதி டி. எஸ். எஸ். ஐயர்; ஸ்ரீமான்கள் என். ராஜகோபாலன், ஆர். ஏ. சுவாமி நாயுடு, சேலம் கே. பழனியப்பன், கஸ்தூரி; கே. சந்தானம், பி. எஸ். என். ஐயர்: ரூ. 3—0—0: லால், பிரிதிசிங், ஏ. டி. என். ஸன்ஸ்: ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் டி. என். வி. ராமன், பி. வி. மார்க்கண்டன், என். எல். கே. சுவாமி, எஸ். வி. ஐயர், பி. என். ஆர். ஐயர், பி. என். ராமநாத், என். ராமன், தமிழ்யன்பர், கசியபமான்; ரூ. 1—0—0: ஸ்ரீமதி எச். எஸ். ஐயர், ஸ்ரீமான்கள் என். பொன்னு, என். எம். அனந்த நாராயணன், என். வி. குருமூர்த்தி ஐயர், எஸ். சபாபதி, வி. சங்கர நாராயண ஐயர், கே. ராமன், எஸ். வைத்தியநாதன், ஏ. வி. ராஜகோபாலன், எஸ். ராமகப்பன், எஸ். வி. ஹனுமந்த ராவ், ஸி. எஸ். வைத்தியநாதன், எச். எஸ். ஐயர், கே. கோபாலன், வி. எஸ். ஐயர், மோஹன், எஸ். ராமானுஜ ஐயங்கார், வி. ராமநாதன், ஆர். எஸ். வாசுதேவன், என். ராமநாதன், பி. எஸ். மணி, ஆர். ராதா கிருஷ்ணன், டி. என். கிருஷ்ணமூர்த்தி, பாரதி அன்பன், கே. ஸ்ரீநிவாஸன், சௌரி ராஜன், வி. ஆர். ரங்கநாதன், கே. ஆர். சக்கரவர்த்தி, கே. வி. சந்திரசேகரன், பி. பி. ராம ஐயர், ஏ. என். ஐயர், ஜி. சங்கரன், கே. வில்வநாதன், ராமமூர்த்தி, சூர்யநாராயண ஐயர், வி. ஜீ. பாலகிருஷ்ணன், பத்மநாப ஐயங்கார், வி. எஸ். மணியன், எம். சந்திரசேகரன், ஏ. வி. ராஜகோபாலன், செல்லப்பா; ரூ. 3—0—0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 103—0—0

மேட்டுப்பாளையம் 'கல்கி' ஏஜெண்டு ஸ்ரீ டி. ஏ. சேஷய்யர் மூலம்:

ரூ. 10—0—0: ஸ்ரீமான்கள் வி. டி. சங்கர்; என். வீராசாமி செட்டியார்; ரூ. 5—0—0:

பிள்ளை, ஸ்ரீமதி எம். கிருஷ்ணவேணியம்மாள்; ரூ. 3—12—0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 23—12—0

பட்டுக்கோட்டை அரசு டிரெயினிங் காலேஜ் ஸ்ரீ எம். சௌந்தர ராசா மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் ச. வேலுப் பிள்ளை, ம. சௌந்தர ராசா, வி. வேலாயுதன், பொ. நல்லலிங்கம், செ. தம்பி ராசா, சி. தினகரன் பிள்ளை, வே. கந்தசாமி முதலியார்; ரூ. 1—0—0: சா. அமுதரத்தினம், செ. தம்பி ராசா, இ. சந்திரசேகரம். ஆக ரூ. 17—0—0

கரூர் கல்வி ஏஜெண்டு ஸ்ரீ டி. வி. நாராயணசாமியின் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீ கே. என். சுப்ரமண்யம்; ரூ. 3—0—0: ஸ்ரீ டி. எம். சோமசுந்தரம்; ரூ. 2—0—0: பன்னாலால் சைக்கிள் ஷாப்பு; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வி. வெங்கடேசுவர ராவ், கே. பொன்னுஸ்வாமி, எம். ஆர். லக்ஷ்மி நரஸிம்மன். ஆக ரூ. 13—0—0

தாராபுரம் மூலனூர் ஏ. ஐ. எஸ். ஏ. காதி வஸ்திராலயம் மானேஜர் ஆர். முத்துச்சாமி மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீ எஸ். ரங்கசாமி; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஆர். முத்துச்சாமி, பி. சாமியப்பன், என். கோவிந்தசாமி, எம். சுந்தர கவுண்டர், என். முத்துராமலிங்க கவுண்டர், டி. எம். அங்கப்ப முதலியார்; ரூ. 4—8—0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை (மணியார்டர் கமிஷன் 0—4— நீங்கலாக.) ஆக ரூ. 12—4—0

சென்னை ஒய். எம். சி. ஏ. காஸ்மாநரிசி பி. ஜே. அனந்தராஜ் மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் பி. ஜே. அனந்தராஜ், எஸ். சுப்ரமண்யம், வி. ஜி. வில்லியம்ஸ், எம். ஸ்ரீநிவாசராவ், வி. ஆர். சாரீ; ரூ. 1—0—0: ஸ்ரீ ஆர். ஜி. சுப்பையா. ஆக ரூ. 11—0—0

உதகமண்டலம் ஸ்ரீமதி வி. எ. சாரதாதேவி மூலம்:

ரூ. 3—0—0: ஸ்ரீமதி வி. எ. சாரதாதேவி; ரூ. 2—0—0: ஸ்ரீமதி வி. எ. சீதாலக்ஷ்மி, ரூ. 1—0—0: ஸ்ரீமதிகள் சி. குப்பம்மாள், கே. ஜே. அம்மாணி, தன்கோபாய்; ரூ. 1—0—0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 9—0—0

ராஜபாளையம் ஸ்ரீ எஸ். நாராயண ஐயங்கார் மூலம்:

ரூ. 6—0—0: ஸ்ரீ எஸ். நாராயண ஐயங்கார்; ரூ. 1—0—0: 'ராஜா' ரெடிமேட் ஸ்டோர் ஸ்ரீ கே. ராமன், திருப்பதி ராஜா. ஆக ரூ. 8—0—0

பெங்களூர் கல்வி ஏஜண்ட் ஸ்ரீ என். வி. ஆர். ஐயர் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீ கே. வி. முத்துசாமி; ரூ. 1—0—0: ஜி. வேங்கடராம நாயுடு, வி. ராஜு, ஜி. கோவிந்தராஜ். ஆக ரூ. 8—0—0

தென் திருப்போரை ஸ்ரீ டி. எஸ். குழைக்காதன் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் டி. ஸ்ரீநிவாசன், டி. கே. கிருஷ்ணன், டி. எஸ். வெங்கடாசலம், எஸ். திருமலை, டி. எ. ஸ்ரீநிவாசன், ஓணமுப்பன், கே. திருமலை. ஆக ரூ. 7—0—0

பெங்களூர் ஸ்ரீ பி. எஸ். ராமச்சந்திரன் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் பி. எஸ். ராமச்சந்திரன், பி. எஸ். சுப்ரமண்யம், பி. எச். கே. மூர்த்தி, இ. பி. குமரன், எம். நாதன், டி. எஸ். முத்து; ரூ. 1—0—0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 7—0—0

குருவிக் கவுண்டன் பட்டி ராம. கே. ஆர். கருப்பன் செட்டியார் மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் அ. அரு. அண்ணாமலை செட்டியார், பழ. ப. சொக்கலிங்கம் செட்டியார்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் மு. பழ. மு. முத்தப்ப செட்டியார், கும. அழ. அழகப்ப செட்டியார்; ராம. கரு. கருப்பன் செட்டியார்; ஆக ரூ. 7—0—0

காஞ்சிபுரம், திருவன்னூர் கிராமம் ஸ்ரீ எ. கே. மாணிக்கம் பிள்ளையின் மூலம்:

ரூ. 2—12—0: ஸ்ரீ எ. கே. மாணிக்கம் பிள்ளை; ரூ. 1—8—0: ஸ்ரீ அ. ரா. சர்க்கரை குருக்கள்; ரூ. 1—4—0: ஸ்ரீ டி. வி. நரஸிம்மன்; ரூ. 1—0—0: ஸ்ரீ க. பொன்னுசாமி முதலியார். ஆக ரூ. 6—8—0

இராயப்பேட்டை கே. ஏழுமலை மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீ கே. ஏழுமலை; ரூ. 4-12-0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 5—12—0

திண்டுக்கல் ஏ. ஐ. எஸ். ஏ. காதி வஸ்திராலயம் மானேஜர் அ. கருப்புசாமி மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீ அ. கருப்புசாமி; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வி. பி. ராமசாமி, மு. பிரப்பா பிள்ளை, கே. டி. ஜி. டி. நாகரத்தினம். ஆக ரூ. 5—0—0

**திருத்தம்:— 21—12—44 இதழில் ரூ. 3—0—0: எச். பாலசுப்பிரமணியம் என்பதற்குப் பதிலாக மகாதேவ தேசாய் சங்கம் வகையாக என்றும், ரூ. 2—8—0 வி. ஓ. சிதம்பரம் பிள்ளை என்பதை வி. ஓ. சிதம்பரம் பிள்ளை வாசகசாலை என்றும் வாசிக்கவும்.**

## காலமானார்



சென்னை, சூளை, ஸ்ரீ 'பாரதி' அச்சகத்தின் உரிமையாளரும், விநாயகம் கம்பெனியின் சொந்தக்காரருமாகிய S. துரைசாமி முதலியாரவர்கள். 59-வது வயதில் சூளை, ஆண்டியப்ப நாய்க்கன் தெரு 33-வது எண்ணுள்ள தம் இல்லத்தில் (14-12-44) வியாழன் இரவு 9-25 மணிக்குக் காலமானார் என்ற செய்தியை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம். பாரதி அச்சகத்தின் மூலமாகச் சென்னையின் அச்சுத் தொழிலுக்கே ஒரு பெருஞ் சிறப்பை யளித்தவர் முதலியார் அவர்கள். கல்கத்தா, பம்பாய் போன்ற இடங்களில் மட்டுமே நடந்து வந்த மூன்று வர்ணப் படங்கள் அமைத்த காலண்டர்களையும், பிறவற்றையும் சென்னைக்குக் கொண்டு வந்த பெருமை முதலியாரவர்கட்கே உரியது. அது மாத்திரமல்ல; எல்லோரிடத்திலும் இனிமையாகப் பழகும் மற்றும், இனியவே புரியும் இயற்பெருங் குணமும் உடைய முதலியார் அவர்கள் பிரிவு இச் சென்னை நகரத்திற்கே பெருத்த நஷ்டத்தைத் தருவது என்று சொல்லுவது மிகையாகாது.

தங்க ஆபரணங்களுக்கும்
ஜ்வலிக்கும் வைரங்களுக்கும்
அசல் வெள்ளி சாமான்களுக்கும்








**P.A. ராஜூ செட்டியார் & பிரதர்**

**கோயமுத்தூர்**

த.பெ. 139.



## இருமல்



இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும்
உயர்ந்த மருந்து

## விரோலின்



---

உபயோகியுங்கள் !!! உபயோகியுங்கள் !!!

# "கிருஷ்ணா பிராண்ட்"

சுத்தம் செய்த வெஜிடபிள் எண்ணெயை உபயோகியுங்கள்

தயாரிப்பவர் :

## தாவணகிரி வனஸ்பதி வெஜிடபிள் ஆயில் கம்பெனி, லிமிடெட்.
## தாவணகிரி

நிறம் சுவை இல்லாமல் சுத்தமானது !
பூராவும் புஷ்டியும் நன்மையும் கொடுப்பது !!
நெய்க்கு சமமானது !!!

*டிஸ்டிரிபியூட்டர்ஸ் :*

# லக்ஷ்மி நிவாஸ் கம்பெனி

ஆர். எஸ். புரம் :: கோயமுத்தூர்



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 88. எல்லாம் கொண்டு ஏகினையே!

தந்தை தசரதன் இறந்த செய்தியை பரதன் சொன்னான். ராமன் அப்படியே மூர்ச்சையாகி விழுந்து விட்டான். சிறிது நேரம் கழித்து அறிவு வந்தது. "இனிமேல் 'சத்தியவந்தன்' என்று சொல்லுவதற்கு உலகத்தில் யார் இருக்கிறார்கள்?" என்று அலறினான்.

பிறகு தன்னைப் பற்றியே ஞாபகம் வருகிறது.

கலைக்கோட்டு முனிவர் தூய வாழ்க்கையைப் பற்றிக் கேட்டு அவருடைய அருளைப் பெற்று, அவரைக் கொண்டு அரிய யாகம் நடத்தி அதெல்லாம் காரணமாக என்னைப் பெற்றாய்! பெற்றதன் பயன்தான் என்ன!

> சொல்பெற்ற நோன்பின்
> துறையோன் அருள்வேண்டி
> நல்பெற்ற வேள்வி
> நவைநீங்க நீஇயற்றி,
> எற்பெற்று நீபெற்ற(து),
> இன்னுயிர்போய் நீங்கவோ!
> கொல்பெற்ற வெற்றிக்
> கொலைபெற்ற கூர்வேலோய்!

[சொல்பெற்ற நோன்பின் துறையோன்: உலகத்தாரால் புகழப்பட்ட அரிய தவ ஒழுக்கத்தில் நின்ற கலைக் கோட்டு முனிவரது; நல்பெற்ற வேள்வி: நலத்தைத் தரக்கூடிய யாகத்தை; நவை நீங்க நீ இயற்றி: யாதொரு குறையுமில்லாமல் செய்து; எற்பெற்று நீ பெற்றது: என்னைப் பெற்று உனக்குக் கிடைத்த லாபம்; இன்னுயிர்போய் நீங்கவோ: உன்னுடைய அரிய உயிர் நீங்கி இறப்பதுதானோ; கொல்பெற்ற: கொல் வேலைத்திறம் வாய்ந்த; வெற்றிக் கொலை பெற்ற கூர்வேலோய்: வெற்றி தருவதற்கான வீரத்தைத் தன்னிடத்தில் கொண்ட வேலை உடையவனே! — வேலின் பிரகாசம் வெற்றியை அப்படி நினைவூட்டுகிறது!]

நான் ஏதோ காட்டுக்குப் போனேன். அது என்ன, அவ்வளவு துக்கத்தையுண்டாக்கக் கூடியதா? அல்ல.

> தேன்அடைந்த சோலைத்
> திருநாடு கைவிட்டுக்
> கான்அடைந்தேன் என்னத்
> தரியாது, காவல்! நீ
> வான்அடைந்தாய்! இன்னம்
> இருந்தேன்நான் வாழ்வுகந்தே!
> ஊன்அடைந்த தெவ்வர்
> உயிர்அடைந்த ஒள்வேலோய்!

[தேன் அடைந்த சோலைத் திருநாடு கைவிட்டு: வண்டுகள் ரீங்காரம் செய்யும் சோலைகளையுடைய அழகான நாட்டை விட்டு; கான் அடைந்தேன் என்ன: ஏதோ காட்டுக்கு வந்து விட்டேன் என்பதைக் கேட்டு; தரியாது: உயிரோடு இருக்க முடியாமல்; காவல நீ வான் அடைந்தாய்: சக்கரவர்த்தியாகிய நீ உயிர் துறந்தாய்; ஊன் அடைந்த தெவ்வர்: தசையினும் கொழுத்த பகைவர்களது; உயிர் அடைந்த ஒள்வேலோய்: தசை வேண்டாம், உயிர்தான் வேண்டும் என்று உயிரை வாங்கிய ஒளி விடும் வேலை ஏந்தியவனே!—ஊன் வேண்டாம் உயிர்தான் வேண்டும் என்ற பாவம், மோனை தானங்களால் அருமையாய் உண்டாய் விடுகிறது.]

அடடா, நீ மாத்திரமா போய் விட்டாய்? என்னவெல்லாமோ உன்னுடன் போய் விட்டதே!

வண்மைஇயும், மானமும்,மேல்
வானவர்க்கும் பேர்க்கலொத்

திண்மைஇயும், செங்கோல்
நெறியும், நிறம்பாத

உண்மைஇயும், எல்லாம்
உடனேகொண்(டு) ஏகினையே!

தண்மை தகைமதிக்கும்
சந்த தனிக்குடையோய்!

[வண்மையும் மானமும்: தாராளமும், பழிக்கு அஞ்சும் மானமும்; மேல் வானவர்க்கும் பேர்க்கலொத் திண்மைஇயும்: தேவர்களாலும் பெயர்க்க முடியாத உறுதியான தீரமும்; செங்கோல் நெறியும்: நீதி நெறியும்; நிறம்பாத உண்மையும்: அப்படி இப்படி விலகாத சத்தியமும்; உடனே கொண்டு ஏகினையே: உன்னுடன் கொண்டு போய் விட்டாயே; தண்மை தகைமதிக்கும் சந்த தனிக் குடையோய்: சந்திரன் மிக்க இதம் செய்வது. ஆனால் அந்த இதமெல்லாம் உன்னுடைய குடையிலிருந்து கடன் வாங்கின மாதிரிதான்; குடையின் இதம் என்றால், ஆட்சியினால் குடிகளுக்கு ஏற்படும் சௌகரியம். குறிப்பு:—ஏக்கமும் சோர்வும் செய்யுளில் கிடக்கும் இசையிலேயே தொனிப்பதைப் பார்க்கலாம்.]

இப்படியெல்லாம் புலம்பிக்கொண்டு ராமன் கீழே விழுந்து புரளுகிறான்.

என்றெடுத்துப் பற்பலவும்
பன்னி, இடர்உழக்கும்

குன்றெடுத்த ஒக்கும்
குவவுத்தோள்க் கோளரியை,

வன்தடக்கைத் தம்பியரும்
மற்றுள்ள மன்னவரும்

சென்(று)எடுத்துத் தாங்கினர்
மாவஷிட்டன் தேற்றினன்.

[என்றெடுத்துப் பற்பலவும் பன்னி: இந்த விதமாக வாய்விட்டு பல பல விதமாக அலறி; இடர் உழக்கும்: துன்பத்தில் திளைக்கும்; குன்று எடுத்த ஒக்கும் குவவுத் தோள்க் கோளரியை: குன்றுபோலப் பருத்த தோளையுடைய சிம்மத்தை (ராமனை); மாவஷிட்டன்: வஷிஷ்ட மகா முனிவர்.]

ராமன் படுகிற துயரத்தைப் பார்த்தால் யாருமே ஆறுதல் சொல்ல முடியாது. அவனோடு சேர்ந்து நைய வேண்டியதுதான். ஆறுதல் சொல்லுகிறது என்பது ஒன்றுண்டா! எனினும், வஷிஷ்டர் ஆறுதல் சொல்லப் பார்க்கிறார்.

## கிட்டுவின் கேள்வி—1.



கிட்டு:—அப்பா! இந்த பொம்மை எதுக்கப்பா செய்து வைத்திருக்கா?

தகப்பனார்:—இது தெரியலையா, கிட்டு! தானியத்தைத் தின்னப் பட்சிகள் வருமோ இல்லையோ? அவைகளைப் பயமுறுத்தி விரட்டுவதற்குத்தான்!

# இயற்கையின் வர்க்கம்



இயற்கையின் வனப்பைக் கண்டு மகிழாதாரும் உளரோ?

பிரம்மன் படைப்பில் எல்லாவித கலைகளும் நிரம்பியுள்ளன. தாவர வர்க்கத்தை பிரம்மன் சித்தரித்துள்ளதை நாம் காணும்தோறும் நம் மனதைப் பறிகொடுக்கிறோம். ஆஹா! ...... எவ்வளவு நேர்த்தியான வர்ணங்கள் .... எவ்வளவு திறமையான வேலைப்பாடுகளுடன் புஷ்பங்களை ஆக்கியுள்ளான் பிரம்மன்! இன்னிசைப் பாடி வரும் வண்டினங்களை மயக்குகின்றன இப் புஷ்பங்கள்.

இரம்மியமான இயற்கையை இன்னும் இரம்மியமாக்க பிரம்மன் தன் முழுத் திறனையும் காட்டுகின்றான். — அவ்விதமாகவே இரதியை ஒத்த பெண்மணிகள் தம் இயற்கை அழகை செயற்கை அழகால் மிகைப்படுத்தக் கருதி புஷ்பங்களை சூடிக்கொள்கின்றனர்.- அது மட்டுமா- தாம் சூடியுள்ள புஷ்பங்களின் நிறத்தை ஒத்த ஆடைகளை அணிய விரும்பி அவைகளை நாடி வருகின்றனர். அவ்விதம் பெண்மணிகள் தேடி வரும் புகழ் பெற்ற ஜவுளிக் கடை......



## ஆரணி ஸில்க் ஹவுஸ்

**4, சன்னதித் தெரு, மயிலாப்பூர்**



தலை நிறைந்த கூந்தலே முகத்தின் அழகை எடுத்துக் காட்டுவது. கூந்தலே முக அழகை ஆக்குவதும், அழிப்பதும். கூந்தலழகையும் முக அழகையும் இன்றே கேசவர்த்தினியைக் கொண்டு விருத்தி செய்யுங்கள்.

அற்ப கேசத்தைவிட அழகுக்கு ஹானி வேறில்லை. இதைப் பரிஹரிக்கக் கேசவர்த்தினியைவிடச் சிறந்த மருந்துமில்லை. இழந்த கூந்தலையும் இளமையையும் கேசவர்த்தினியைக் கொண்டு இன்றே பெறுங்கள்.

அழகுள்ளவர் ஒரு சிலரே. ஆனால் கூந்தலழகையோ கேசவர்த்தினி உபயோகத்தால் ஒவ்வொருவரும் பெறலாம். கேச சம்பத்து படைத்தவர் அதை இழக்காமல் கேசவர்த்தினி கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியால் அதை அடையுங்கள்.

# கேசவர்த்தினி

**கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது.**

**விலை அணா 12.**

(மேற் செலவு வேறு)

**எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்**

தயாரிப்பவர்:

**தென் இந்திய ரஸாயனசாலை,**

**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்**

No. 7.



# சோபாவும் நாற்காலியும்

-நாடோடி-

அன்றொரு நாள் ராத்திரி இரண்டு மணி இருக்கும். தூங்கிக் கொண்டிருந்தவன் திடீரென்று யாரோ பேசுவது கேட்டு விழித்துக் கொண்டேன். மூதவில் பக்கத்தில் தூளியில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த அனுதான் தனக்குத் தானே பேசிக் கொண்டிருளோ என்று நினைத்தேன்.

கொஞ்ச நாட்களாக அனுவுக்கு, "தாத்தாத்தா!" என்று சொல்லத் தெரிந்து விட்டது. ஆனால் அவள் தாத்தா ஊரில் இல்லாமல் வெளியூர் போயிருக்கிறபடியால் அவர் திரும்பி வருவதற்குள் எங்கே இந்த வார்த்தை மறந்துவிடப் போகிறதோ என்று நாள் முழுவதும் இந்த வார்த்தையைப் பேசிப் பேசி ஒத்திகை செய்து கொண்டிருக்கிறாள். இத்தனை சிரமப் பட்டு ஒத்திகை செய்த வார்த்தை, ராத்திரி தூங்கும்போது மறந்து போய் விட்டால் என்ன பண்ணுவது என்று இரவிலும் நடுவில், நடுவில் விழித்துக் கொண்டு, "தாத்தாத்தா" என்று ஜபம் செய்ய ஆரம்பித்து விடுகிறாள். இதனால் என் தூக்கம் கெடுவது சொல்லி முடியாது. (நான் கொஞ்ச நாட்களாகக் காரியாலயத்தில் தூங்கி விழுவதன் காரணத்தை என் மானேஜர் இப்பொழுதாவது அறிந்து கொண்டிருப்பார் என்று நம்புகிறேன்.)

ஆகவே, ஏதோ பேச்சுக் குரலைக் கேட்டதும் அனுதான் தன் ஒத்திகையை ஆரம்பித்து விட்டாளோ என்று நினைத்தேன். ஆனால், விழித்துக் கொண்டு பார்த்தால் அனு சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். பின் பேசினது யார் என்று கவனித்துப் பார்த்ததில், எங்கள் வீட்டு முன் ஹாலில் போடப்பட்டிருந்த சோபாவும், நாற்காலியும்தான்.



"தாத்தாத்தா!"

ஸ்திரீகள் வீட்டை விட்டு வெளியே போகக் கூடாது, எப்பொழுது பார்த்தாலும் வீட்டுக்குக் காவலாக வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடக்க வேண்டும் என்று நம் பெரியவர்கள் சொல்லியிருக்கும் வார்த்தையில் எனக்கு அதிக நம்பிக்கை கிடையாது. ஆகவே சரசு எங்கேயாவது தன் சிநேகிதியைப் பார்த்துவிட்டு வருகிறேன் என்று புறப்பட்டால் நான் வேண்டாம் என்று சொல்வது கிடையாது. கூடத் துணைக்கு வா என்று அவளாகக் கூப்பிட்டால் போக வேண்டியது. இல்லாவிடில் வீட்டைக் காவல் காத்துக் கொண்டிருக்க வேண்டியது.

ஆனால் நம் பெரியவர்கள் உண்மையிலேயே பெரியவர்கள்தான், ஏதோ காரணத்தைக் கொண்டுதான் அப்படி ஸ்திரீகளை வீட்டை விட்டு வெளியே விடாதே என்று சொன்னார்கள் என்று இப்பொழுதுதான் எனக்குக் கொஞ்ச காலமாகத் தெரிந்து வருகிறது.

சரசு ஒவ்வொரு தடவையும் தன் சிநேகிதி யாரையாவது பார்க்கப் போய் விட்டு வரவேண்டியதுதான் தாமதம், நான் பாங்கியில் போட்டு வைத்திருக்கும் கொஞ்ச நஞ்சம் பணத்துக்கு (ஐயா, அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரே! நிஜம் என்று நம்பிக்கொண்டு கடன் கேட்க வந்து விடாதேயும்!) உடனே தலை வலிக்க ஆரம்பித்துவிடும். சிநேகிதி என்ன மாதிரிப் புடவை வாங்கியிருக்கிறாளோ, அதே மாதிரிப் 'புதுப் புடவை நானும் சரசுவுக்கு வாங்கிக் கொடுத்தாக வேண்டும். அவள் என்ன மாதிரி புது ஸிலிப்பர் வாங்கியிருக்கிறாளோ, அதே மாதிரி புது ஸிலிப்பர் நானும் வாங்கியாக வேண்டும்.

இப்படியாக சரசு என்னைக் கடைசியாக வாங்கச் சொன்ன

பொருள் ஒரு சோபா செட்டு! என்னைப் பார்க்க வீட்டுக்கு யாராவது அடிக்கடி வந்து கொண்டிருக்கிறார்களென்றும், முன் கூடத்தில் ஒரு சோபா செட்டு வைக்கப்பட்டிருந்தால்தான் அவர்கள் என்னைப் பற்றிப் பெருமையாக எண்ணிக் கொள்வார்களென்றும் சரசு கட்டாயப் படுத்தி என்னை சோபா செட்டு வாங்கச் சொன்னாள்! அப்படியே வாங்கினேன்.


......தூங்கி விழுவதன்

முன் கூடத்தில், கூடத்துக்கு அழகாக பெரிய சோபா ஒன்றும், சின்ன சோபா இரண்டும் அழகாக வைக்கப்பட்டன. சோபாவுக்கு அழகாக ஒரு மெத்தை தைத்துப் போடப்பட்டது. மெத்தைக்கு அழகாக ஒரு உறை தைத்துப் போடப் பட்டது. உறைக்கு அழகாகப் பூ வேலைகள் செய்யப்பட்டன.

இப்படி அழகுக்கு அழகு செய்து கொண்டு போனதால் சோபா வெகு அழகாக விளங்க ஆரம்பித்து விட்டது. அது அழகாக விளங்க, விளங்க அதில் யாரும் உட்காரக் கூடாது என்று சரசு உத்தரவு போட ஆரம்பித்து விட்டாள். வீட்டில் யாராக இருந்தாலும் சரி, சோபாவில் உட்காரக் கூடாது. ஆம், அனுகூட உட்காரக் கூடாது!

சரி, நான்தான் வீட்டுக்குப் புருஷன், சரசுவைக் கண்டு பயப்பட வேண்டியவன், சோபாவில் உட்காரக் கூடாது. ஆனால் என்னைத் தேடிக் கொண்டு வருகிறவர்கள் கண்டார்களா என்ன, சோபாவில் உட்காரக் கூடாது என்று. இல்லை, "தயவு செய்து சோபாவில் உட்காரக் கூடாது" என்றுதான் நோட்டீசு எழுதி ஒட்டியிருக்கிறோமா?

ஆகவே, சிநேகிதர்கள் யாராவது என்னைப் பார்க்க வந்தால் நான் படும் திண்டாட்டம் சொல்லி முடியாது. அத்தனைக்கும் அவர்கள் வந்ததும் வராததுமாக, "இதோ, இந்த நாற்காலியில் உட்காருங்கள்" என்று இதற்கென்றே தயாராக சோபாவுக்குப் பக்கத்தில் போட்டு வைத்திருக்கும் பழைய பிரம்பு நாற்காலியைப் பக்கத்தில் இழுத்துப் போடுவேன். ஆனால் என்ன இழுத்துப் போட்டு என்ன பிரயோசனம்? அந்தப் பாவி மனுஷர்கள் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல், வேணுமென்றே சோபாவில் தொப்பென்று உட்காருவார்கள்.


அதே மாதிரிப் புடவை

அன்றைக்கு ஒரு நாள் என் நண்பர் ஒருவர் என்னைத் தேடிக் கொண்டு வந்தார். நான் பிரம்பு நாற்காலியை என்ன இழுத்துப் போட்டும் கவனிக்காமல், என்னுடன் ஏதோ பேசிக் கொண்டே 'தொப்'பென்று சோபாவில் சாய்ந்து விட்டார்!

எனக்கா என்ன பண்ணுவது என்று தெரியவில்லை. சரசுவா கதவுக்குப் பின்னால் இருந்து கொண்டு, என்னை எரித்து விடுபவள்போல் முழித்து முழித்துப் பார்க்கிறாள்! வந்த மனுஷரை சோபாவை விட்டு எழுந்திருக்கச் சொல்லுவதற்கு என்னென்னமோ யுக்திகள் பண்ணினேன்.

"இங்கே ரொம்ப இறுக்கமாக இருக்கிறதே, வாசல் திண்ணைக்குப் போகலாம், வாருங்கள்" என்றேன். ஊஹூம். அவர் நகரும் வழியாயில்லை. "எங்கள் வீட்டைச் சுற்றி நீங்கள் பார்த்ததே, இல்லையே! வாருங்கள்" என்றேன். ஊஹூம்; அப்பொழுதும் அவர் நகரும் வழியாயில்லை. இப்படியாகத்தானே என்னென்னமோ யோசனைகள் பண்ணிப் பார்த்தேன். பிரயோசனமில்லை.

அந்தப் பாவி மனுஷன் சோபாவில் உட்காரப் போக, அதனால் நானும் சரசுவும் நான்கு நாட்கள் பேசிக் கொள்ளவில்லை. இந்த நான்கு நாட்களும் அனுகூட தன் தாயார் பக்கம் சேர்ந்து கொண்டு, என்னைப் பார்த்துத் தன் பொக்கை வாய்ச் சிரிப்பு சிரிப்பதை நிறுத்தி விட்டாள்!

இதற்காக அன்றைய தினத்திலிருந்து, யார் வந்தாலும் சரி, அவர்களை சோபாவில் உட்கார வைப்பதில்லை என்று கங்கணம் கட்டிக் கொண்டேன். இதனால் கொஞ்சம் கொஞ்சமாக சோபாவுக்கு வேலை குறைந்தது. நாற்காலிக்கு வேலை அதிகமாகிக் கொண்டு வந்தது. இதைக் குறித்துத்தான் அன்று சோபாவும், நாற்காலியும் பேசிக் கொண்டிருந்தன.

அவை என்னதான் பேசுகின்றன வென்று சற்றுக் கவனித்துக் கேட்டேன்.

நாற்காலி :—ஐயா! சோபா அவர்களே! என்ன இருந்தாலும் நீர் அதிர்ஷ்டசாலி, ஐயா! எவ்வளவுக் கெவ்வளவு உம்மை நிறையப் பணம் கொடுத்து வாங்கினார்களோ, அவ்வளவுக் கவ

ளவு உமக்கு வேலை குறைச்சல். குறையப் பணம் கொடுத்து வாங்கின எனக்கு வேலை ஜாஸ்தி. எப்படி இருக்கிறது நியாயம்?

சோபா:—அதற்கென்ன ஐயா பண்ணலாம்? தற்கால உலக நீதியே அப்படித்தானே இருக்கிறது? எவ்வளவுக் கெவ்வளவு மதிப்பு அதிகமோ, அவ்வளவுக் கவ்வளவு உழைப்பு குறைச்சல். எவ்வளவுக்கெவ்வளவு மதிப்புக் குறைவோ, அவ்வளவுக் கவ்வளவு உழைப்பு ஜாஸ்தி.


பேசியவர்கள்

அந்தப் பீரோவில் சுகமாகத் தூங்குகிறாரே பட்டுப் புடவையார், அவருக்கு எத்தனை உபசாரம், எத்தனை சிசுருஷை! விலை நூற்றைம்பது கொடுத்து வாங்கியிருக்கும் அவர் வருஷத்தில் ஒரு நாளைக்காவது உபயோகப் படுகிறாரா என்பது சந்தேகந்தான்.

நாற்காலி:—இது என்ன அநியாயமாக அல்லவா இருக்கிறது?

சோபா:— நியாயமோ, அநியாயமோ, மனுஷர்களுக்குள்ளே கூட இப்படித்தான் இருப்பதாகத் தெரிகிறது.

நாற்காலி:—ரொம்ப அழகாக இருக்கிறதே உலக நீதி? எந்த உலகத்து நீதி?

சோபா:—எல்லாம் இந்த உலகத்து நீதிதான். உமக்குச் சந்தேகமாய் இருந்தால் அதோ அந்தக் கொடியில் உலர்த்து கொண்டிருக்கிறாரே சுங்குடிப் புடவையார், அவரை வேண்டுமானால் கேளுங்கள்.

நாற்காலி:—அப்படியானால் உமக்குக் கதிமோட்ச மில்லையா! எந்தக் காலத்திலும் நாம் இப்படியே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க வேண்டியதுதானா?

நாற்காலி:—ஐயா, சுங்குடிப் புடவையாரே! என்ன இவர் சொல்வது நியாயந்தானா? எவ்வளவுக் கெவ்வளவு மதிப்பு குறைச்சலோ, அவ்வளவுக் கவ்வளவு உழைப்பு அதிகம், எவ்வளவுக் கெவ்வளவு மதிப்பு அதிகமோ, அவ்வளவுக் கவ்வளவு உழைப்பு குறைச்சல் என்று சோபா அவர்கள் சொல்லுகிறார்களே, அப்படித்தானா என்று கேட்கிறேன்.

சுங்குடிப் புடவை:—பின் அதற்குச் சந்தேகம் வேறேயா? நீரும் நானும் தான் இந்த வீட்டில் சென்ற ஐந்து வருஷ காலமாகப் பழகி வருகிறோமே, நீரும்தான் பார்த்துக் கொண்டு வருகிறீரே? ஏழு ரூபாய்க்கு வாங்கின என்னை என்ன அடி அடிக்கிறார்கள், என்ன துவை துவைக்கிறார்கள்! ஆனால் அதோ

## ஏமாந்த சோணகிரி



சுங்குடிப் புடவை:—நம்மைப் போன்றவர்களுக்குச் செத்தால்தான் கதி மோட்சம். இதோ நாளைக்கு என்னைக் கொடியிலிருந்து எடுக்கும்போது, நான் இந்தக் கொடிக் கழியின் நுனியில் மாட்டிக் கொண்டு 'டர்' என்று கிழிந்து விடப் போகிறேன். அதே மாதிரி நீரும் நாளைக்கு யாராவது உட்கார்ந்திருக்கிற சமயம் பார்த்து, 'டபா'லென்று காலை ஒடித்துக் கொண்டு விடும்.

★

அன்று இரவு நிர்மானித்தபடி, அடுத்த நாள் சுங்குடிப் புடவையும் கிழிந்தது, பிரம்பு நாற்காலியும் ஒடிந்தது. நாற்காலி ஒடிந்தும் சரக வந்தவர்களைச் சோபாவில் உட்கார விடுகிறானா என்றால், கிடையாது! இன்னொரு நாற்காலி வாங்கிக் கொண்டு வரும்படி உத்தரவிட்டு விட்டான்.

# விராடனைக் காத்தது

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

கீசக வதத்தின் பயனாக விராடனுடைய நகரத்தில் திரௌபதியைக் கண்டு எல்லாருக்கும் பெரும் பயம். இவளோ அழகாயிருக்கிறாள். யாவரும் இவளுடைய தோற்றத்தால் இழுக்கப் படுகிறார்கள். கண்ணெடுத்துப் பார்த்தாலும் குற்றமாகலாம். இது நகரத்தாருக்கும் அரண்மனையில் உள்ளவர்களுக்கும் பெரிய ஆபத்து. கந்தர்வர்கள் கோபங்கொண்டு ஏதேனும் செய்து விடுவார்கள். இவளை நகரத்தை விட்டு வெளிப்படுத்தி விடுவதே நலம் என்று எண்ணி எல்லாரும் சுதேஷ்ணையைக் கேட்டுக் கொண்டார்கள்.

"அம்மா! நீ ரொம்ப புண்ணியசாலி. தயவு செய்து எங்கள் ஊரைவிட்டுப் போய்விடு. என்னிடம் இதுவரை நீ வேலை செய்தது போதும்" என்றாள் சுதேஷ்ணை திரௌபதியிடம்.



அஞ்ஞாத வாசத் தவணை இன்னும் ஒரு மாதமே இருந்தது. சுதேஷ்ணை சொன்னதைக் கேட்டு வருத்தம் மேலிட்டு திரௌபதி, "என் மேல் கோபங்கொள்ள வேண்டாம். நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. இன்னும் முப்பது நாள் பொறுத்திருங்கள். ஒரு மாதம் தீர்ந்ததும் என் பதிகளான கந்தர்வர்கள் காரிய சித்தி அடைந்து விடுவார்கள். அப்போது நான் அவர்களுடன் சேர்ந்து விடுவேன். கந்தர்வர்கள் விராட ராஜனுக்கும் உனக்கும் என்றென்றைக்கும் நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள்! என்னைப் போகச் சொல்லாதே" என்றாள்.

திரௌபதிக்குக் கோபம் வருமோ என்று சுதேஷ்ணையும் பயந்து அவள் சொல்லுக்கு இசைந்தாள்.

• • •

பன்னிரண்டு வருஷங்கள் முடிந்து அஞ்ஞாத வாச காலம் ஆரம்பமானது முதல் துரியோதனனுடைய சாரர்கள் அவன் கட்டளைப்படி அநேக தேசங்களிலும் கிராமங்களிலும் நகரங்களிலும் ஜனங்கள் மறைந்திருக்கும்படியான எல்லா இடங்களிலும் இடைவிடாமல் பாண்டவர்களைத் தேடினார்கள். இவ்வாறு பல மாதங்கள் சென்றன. சாரர்கள் நகரத்துக்கு வந்து தாங்கள் தேடியதையும் பாண்டவர்களைக் கண்டு பிடிக்க முடியவில்லையென்பதையும் துரியோதனனிடம் தெரிவித்தார்கள்.

"மனுஷ்யேந்திரரே! ஜனசஞ்சாரமில்லாத இடங்களெல்லாம் பார்த்துவிட்டோம். புதர்கள் நிறைந்த காடுகளிலும் பார்த்துவிட்டோம். ஆசிரமங்களிலும் மலைச் சிகரங்களிலும் தேடினோம். ஜனங்கள் நிறைந்திருக்கின்ற நகரங்களிலும் நன்றாக விசாரித்துத் தேடினோம். யாதொரு துப்பும் கிடைக்கவில்லை. அவர்கள் நசித்தே போய்விட்டார்கள் என்பது உறுதி" என்றார்கள்.

மிக்க பலவானான கீசகனை யாரோ கந்தர்வர்கள் ஒரு ஸ்திரீ விஷயமாகக் கொன்று விட்டார்கள் என்கிற விருத்தாந்தம் ஹஸ்தினாபுரத்துக்கும் வந்தது. கீசகனைக் கொல்லும் சக்தி வாய்ந்தவர்கள் உலகத்தில் இருப்பவர் மூவரே. அவர்களில் பீமன் ஒருவன். கீசகனைக் கொன்றவன் பீமனாகவேயிருக்கலாம். கொலைக்குக் காரணம் திரௌபதியாகவும் இருக்கலாம் என்று துரியோதனன் ஊகித்தான். இவ்வாறு சந்தேகித்ததை அவன் சபையில் சொன்னான்.

"விராட நகரத்தில் பாண்டவர்கள் மறைந்திருப்பதாக நான் எண்ணுகிறேன். விராட ராஜன் என்னிடம் சிநேகம் கொள்ள மறுத்து வருகிறான். அவனுடைய தேசத்தை நாம் படையெடுத்துப் போய்த் தாக்குவதே நல்லது. பசுக் கூட்டத்தைக் கைப்பற்றுவோம். அங்கே பாண்டவர்கள் இருந்தால் நிச்சயம் போருக்கு வருவார்கள்.





பிரதிக்ஞை செய்யப்பட்ட காலத்திற்குள் அவர்களை நாம் கண்டு விட்டால் மறுபடியும் பன்னிரண்டு வருஷ காலம் அவர்கள் வனம் போக வேண்டியதாகும். பாண்டவர்கள் அவ்விடமில்லாவிட்டாலும் நமக்கு நஷ்டம் ஏதும் இல்லை" என்றான்.

இவ்வாறு துரியோதனன் சபையில் சொன்னதும் திரிகர்த்த தேசாதிபதியான சுசர்மராஜன் எழுந்து தன் யோசனையைச் சொன்னான்: "மத்ஸ்ய தேசத்து ராஜா எனக்கு விரோதியானவன். கீசகன் என்னை மிகவும் பாடுபடுத்தியிருக்கிறான். அவன் இறந்துவிட்டபடியால் இந்தச் சமயத்தில் விராடனை எதிர்த்துப் படையெடுத்துப் போக எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும்" என்றான்.

கர்ணன் இந்த யோசனையை ஆதரித்தான். பிறகு எல்லாரும் சேர்ந்து முடித்த யோசனை, சுசர்மன் தன்னுடைய சேனையைக் கொண்டு மத்ஸ்ய தேசத்தில் தென் பக்கத்திலிருந்து பிரவேசித்துத் தாக்க வேண்டியது. அப்போது விராடனுடைய சேனையெல்லாம் சுசர்மனை எதிர்க்கச் செல்லும். அதன் பிறகு துரியோதனன் கௌரவப் படையுடன் எதிர் பாராதபடி விராட நகரத்தை வடக்கே தாக்குவதென்று தீர்மானித்தார்கள்.

சுசர்மன் விராடனுடைய தேசத்தில் தெற்கே யிருந்த பசுக் கூட்டங்களைக் கவர்ந்து தோட்டங்களையும் வயல்களையும் பாழாக்கினான். இடையர்கள் ஓடிப் போய் விராடனிடம் முறையிட்டார்கள். விராடன் தன் மைத்துனன் கீசகன் இந்த ஆபத்துக் காலத்தில் இல்லையே என்று பரிதபித்தான். அச் சமயம் கங்கன், அதாவது யுதிஷ்டிரன், "அரசனே! நீர் கவலைப்பட வேண்டாம். நான் சந்நியாசியாயிருந்தாலும் ஆயுதப் பயிற்சி பெற்றவன். நான் கவசம் பூண்டு ரதம் ஏறி உம்முடைய சத்துருக்களைத் துரத்தி விடுவேன். சமையற்காரனை வலலனும் உமது குதிரைக்காரன் தாமக்கிரந்தியும் மாடுகளைப் பார்த்து வரும் தந்திரிபாலனும் ரதங்கள் ஏறி நமக்குத் துணையாக வர உத்தரவிடும். அவர்களும் வீரர்கள் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர்களுக்கெல்லாம் ரதங்களும் ஆயுதங்களும் தருவதற்கு உத்தரவு செய்வீராக" என்றான்.

விராடன் மிகவும் மகிழ்ச்சியடைந்து அவ்வாறே உத்தரவிட்டுத் தேர்கள்





தயாராயின. அருச்சுனனைத் தவிர மற்ற பாண்டவர்கள் நால்வரும் விராடனுடைய சேனையுடன் சுசர்மனை எதிர்க்கச் சென்றார்கள்.

சுசர்மனுடைய சேனைக்கும் விராடன் சேனைக்கும் கடும் போர் நடந்தது. இரு தரப்பிலும் பலர் மாண்டார்கள். சுசர்மன் தன் துணையாளர்களுடன் விராடனை எதிர்த்து அவனுடைய தேரைச் சூழ்ந்து கொண்டான். விராடன் தேரை விட்டு இறங்கி யுத்தம் செய்ய வேண்டியதாயிற்று. சுசர்மன் விராடனை உயிரோடு பிடித்துத் தன் தேரில் ஏற்றி வைத்துக் கொண்டு வெற்றியுடன் சென்றான். விராடன் இவ்வாறு பிடிபட்ட உடனே மத்ஸ்ய ராஜ்யச் சைனியம் தைரியம் இழந்து சிதறி ஓட ஆரம்பித்தது.

அப்போது யுதிஷ்டிரன் பீமசேனனுக்கு உத்தரவிட்டான்: "இனி நீ உபேட்சையாக இருத்தலாகாது. விரா





டனை விடுவித்துச் சிதறி ஓடும் மத்ஸ்ய சேனைக்குத் தைரியம் உண்டாக்கி, சுசர்மனை எதிர்க்க வேண்டும்" என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொன்னதும் பீமன் ஒரு மரத்தைப் பிடுங்கப் போனான். யுதிஷ்டிரன் அதைத் தடுத்து "நீ உன் வழக்கப்படி மரத்தை எடுத்துச் சிம்மநாதம் செய்தாயானால் உன்னைக் கண்டு கொள்வார்கள். சாதாரண முறையில் தேரின் மேலிருந்தே வில்லையெடுத்து யுத்தம் செய்" என்றான்.

அவ்வாறே பீமன் தேர் ஏறி எதிரிகளைத் தாக்கி விராடனை விடுவித்துச் சுசர்மனையும் சிறைப் படுத்தினான். பயந்தோடிய மத்ஸ்ய தேசத்துச் சேனை மறுபடி ஒழுங்காக நின்று போர் புரிந்து சுசர்மனுடைய படையை வென்றது.

* * *

சுசர்மன் தோல்வி யடைந்தான் என்கிற செய்தி நகரத்துக்கு எட்டியவுடன் ஊரரெல்லாம் நகரத்தை அலங்கரித்து வெற்றியுடன் திரும்பி வரும் அரசனை எதிர் கொள்ளச் சென்றார்கள். இவ்வாறு விராட நகரம் ஆரவாரத்திலிருந்த பொழுது திடீர் என்று நகரத்துக்கு வடக்கிலிருக்கும் இடைச்சேரிகளிலுள்ள பசுக் கூட்டங்கள் துரியோதனனுடைய பெருஞ் சேனையால் பிடிக்கப்பட்டன. கௌரவ சேனை அட்டகாசம் செய்து கொண்டு லக்ஷக் கணக்கான பசுக்களை ஓட்டிச் சென்றது. மாட்டுக்காரர்களுடைய தலைவன் நகரத்துக்கு ஓடி வந்து விராடனுடைய குமாரன் உத்தரனைக் கண்டு முறையிட்டான்.

"ராஜகுமாரனே! கௌரவர்கள் நம்முடைய பசுக்களை ஓட்டிக் கொண்டு போகிறார்கள். விராட ராஜன் தெற்கே திரிகர்த்தர்களை எதிர்க்கச் சென்று விட்டான். எங்களுக்கு யாரும் காப்பு இல்லாமல் தவிக்கிறோம். அரசனுக்குப் புத்திரனாகிய நீதான் வந்து பசுக்களை மீட்டுக் கொண்டு வரவேண்டும். குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவாயாக!" என்றான்.

இவ்வாறு இடைச்சேரித் தலைவன் மகாஜனங்களுக்கும் அந்தப்புர ஸ்திரீகளுக்கும் எதிரில் உத்தரனிடம் முறையிட்டபோது இராஜகுமாரனும் உத்ஸாகம் அடைந்தான். "தேரை ஓட்டக்கூடிய ஒரு சாரதி இருந்தானானால் நான் ஒருவனாகவே சென்று பசுக்களைத் திருப்பிக் கொண்டு வந்து சேருவேன். நான் போர்ச் செய்யும் யுத்தத்தைக் கண்டு இவன் அருச்சுனனோ என்று எல்லாரும் திகைப்பார்கள்!" என்றான்.

இவ்வாறு உத்தரன் சொன்னபோது திரௌபதியானவள் அந்தப்புரத்தில் இருந்தாள். அவள் உத்தரை யிருந்தவிடம் உடனே ஓடிச் சென்று, "ராஜகுமாரியே! தேசத்துக்கு ஆபத்து நேரிட்டிருக்கிறது. கௌரவப் படை வடக்கே நகரத்தைத் தாக்கி வருவதாகவும் மத்ஸ்ய தேசத்துப் பசுக்கள் பிடிபட்டதாகவும் கோபாலர்கள் இளவரசனிடம் ஓடி வந்து முறையிடுகிறார்கள். உத்தரனுக்குச் சாரதி வேண்டும். அதனால் வேலை தடைப்பட்டிருக்கிறது. பிருகன்னளை அருச்சுனனுக்குச் சாரதியம் செய்திருக்கிறான். நான் பாண்டவர்களுடைய அந்தப்புரத்தில் வேலையிலிருந்தபோது இதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். பிருகன்னளை அருச்சுனனிடம் வில் வித்தையும் பயின்றிருக்கிறான் என்பது எனக்குத் தெரியும். இவனை நீ உடனே உத்தரனுக்குச் சாரதியாகப் போக உத்தரவிட வேண்டும்" என்றான்.

உத்தரை தன் சகோதரனிடம் சென்றாள். "தேரோட்டுவதில் பிருகன்னளை பெரிய சாமர்த்தியசாலி என்று தெரிய வருகிறது. அவளை அழைத்துக் கொண்டு நீ போய் ஊரைக் காப்பாற்று. மிகுந்த அறிவாளியான நம்முடைய ஸைரந்திரி இந்த பிருகன்னளையைப் புகழ்ந்து கூறுகிறாள். பாண்டவ வீரனான அருச்சுனனுக்கு அவள் தேரோட்டியாயிருந்திருக்கிறாளாம்" என்றாள்.

"சரி" என்று உத்தரன் சொன்னவுடன் உத்தரை நடனசாலைக்கு ஓடிப்





போய் அருச்சனனுடைய பிருகன்னளையிடம் விஷயத்தைத் தெரியப் படுத்தினான்.

"பிருகன்னளையே! என் பிதாவினுடைய தனத்தையும் பசுக்களையும் கௌரவர்கள் கவர்ந்து கொண்டு போகிறார்கள். அரசன் நகரத்தில் இல்லாத சமயம் பார்த்து இந்த துஷ்டர்கள் வந்திருக்கிறார்கள். நீ அருச்சனனுக்கு ரதம் ஓட்டியிருக்கிறாயென்றும் யுத்தப் பயிற்சி பெற்றிருக்கிறாய் என்றும் ஸைரந்திரி சொல்லுகிறாள். ராஜகுமாரனுக்கு நீ சாரதியாகச் செல்ல வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

அருச்சனன் கொஞ்ச நேரம் தயங்குவதைப்போல் காட்டிக் கொண்டான். பிறகு ஒப்புக்கொண்டான். கவசத்தைப் பெற்றுக் கொண்டு ஏதொன்றும் தெரியாததுபோல் தலைகீழாக அணிந்து கொள்ளப் போனான். அந்தப்புரத்திலிருந்த ஸ்திரீகள் அதைக் கண்டு சிரித்தார்கள். இவ்வாறு கொஞ்ச நேரம் வேடிக்கை செய்த பிறகு பிருகன்னளை குதிரைகளைப் பிடித்துத் தேரில் பூட்டும்போது தேர்ச்சி பெற்ற சாரதியைப் போலவே தோன்றினான். கடிவாளம் பிடித்துக் குதிரைகளையும் நன்றாகவே ஓட்டினான். உத்தரனும் ஏறிச் சிம்மக் கொடி பறக்க ரதம் சென்றது. அந்தப்புரப் பெண்கள் எல்லோரும் ஜயகோஷம் இட்டார்கள்.

"இராஜகுமாரன் வெற்றி பெறுவான். உங்களுக்கெல்லாம் நான் எதிரிகள் அணிந்திருக்கும் வஸ்திரங்களைப் பறித்துக் கொண்டு வந்து வெற்றிப் பரிசாகத் தருவேன்" என்று பிருகன்னளை ஸ்திரீகளுக்குச் சொல்லியபோது பெரிய சந்தோஷ ஆரவாரம் கிளம்பிற்று.



"ஒரு மணி நேரமாய் எங்கே போயிருந்தாய்?"

"அடுத்தாத்து மங்களத்தோட வாசல்லேதானே பேசிண்டு நின்னேன்?"

"உன்னே அழைத்து வந்து உட்கார்த்து போப்படாதோ?"

"உட்கார நேரமில்லேன்னு!......"

# காலக்ஷேபம்

### காரணம்

"நேற்று கோர்ட்டிலே, சாட்சி விசாரணை நடந்து கொண்டிருந்தபோது, நீதிபதி மயக்க மடைந்து மேஜையின்மீது சாய்ந்து விட்டார்!"

"சாட்சிகளில் யாராவது நிஜம் பேசினார்களா, என்ன?" —எம். கே. செய்க்.

★

### ஆதரவு!

முதல் பிச்சைக்காரன் (மற்றொரு பிச்சைக்காரனிடம்):—டேய், நீயே பிச்சை எடுக்கிறாயே, நீ எதுக்கடா அந்த உண்டியிலே பணம் போடுறே?

மற்றவன்:—அது பிச்சைக்காரர்கள் விடுதிக்காக உண்டி வசூல் செய்யறாங்க; அதுக்காக நம்ம தர்மமும் இருக்கட்டுமின்னுதான் ஒரு காலணா போட்டு வைத்தேன்.

—நவநீதம்.

★

### நல்ல காரணம்!

ஒருவன் (கல் குவியலின்மேல் சிவப்பு விளக்கு வைத்திருப்பதைப் பார்த்துவிட்டு):—"ஏனப்பா! இந்தக் கற் குவியல்களின் மேல் ஏன் சிவப்பு விளக்கு வைத்திருக்கிறீர்கள்?"

ரோட் வேலை செய்பவன்:—கற்கள் இருப்பது தெரிவதற்காக!

ஒருவன்:—கற்கள் எதற்கு?

ரோட் வேலை செய்பவன்:—சிவப்பு விளக்கு வைப்பதற்கு! —"ஜெயஸ்ரீ"

★

### பந்தயம்

சோமு:—இன்று குதிரைப் பந்தயத்தில் எனக்கு நூறு ரூபாய் கிடைத்தது.

ராமு:—கிடைத்தால் என்ன, இன்று வந்தால் நாளைக்குப் போய்விடப் போகிறது!

சோமு:—அப்படியானால் ஒரு நாள் விட்டு ஒரு நாள் போகிறேன்! —கோபால்.

★

### நம்ப முடியுமா?

கோபு:—கண்ணால் பார்த்தால் நம்ப வேண்டியதுதானே?

சீனு:—அது எப்படிப்பா முடியும்? உன்னை நான் கண்ணால் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். அதனால் உன்னை நம்ப முடியுமா என்ன? —பி. வி. சங்கரராஜன்

### ஞாபக மறதி

ஒருவர்:—கழுத்து ரொம்ப நெருக்கமாய் இருக்கிறதே?

தையல்காரர்:—அடாடா! பித்தான் போடும் துவாரத்தில் அல்லவா கழுத்தை விட்டுக் கொண்டிருக்கிறீர்! —எஸ். ராஜன்.

★

### பையனின் சமர்த்து

கடைக்காரன்:—நீ ரொம்பவும் சின்னப் பையனாக இருக்கிறாய். இன்னும் கொஞ்சம் வயதான பையனாகத்தான் எனக்கு வேலைக்கு வேண்டும்.

பையன்:—அப்படியானால், நான் இன்னும் பத்து நாள் பொறுத்து உங்களை வந்து பார்க்கட்டுமா? —எஸ். ராமையா.

★

### வேண்டாத ஆசாமி!

ருக்கு அம்மாமியின் வீட்டிற்கு வந்த சேஷிப் பாட்டி வெகு நேரம் வம்பு பேசிய பின், தான் போய் வருவதாகச் சொல்லிக் கொண்டு எழுந்தாள். அப்பொழுது அம்பி, "பாட்டீ! இப்பொழுதே நீங்கள் உங்காத்துக்குப் போயிடுவேளோல்லியோ?" என்று கேட்டான்.

"ஆமாண்டா, கண்ணு! ஏன் கேட்கிறே?"

"ஏன்னு, நீங்க உங்காத்துக்குப் போனப்புறம் அம்மா எனக்குத் தோசை வார்த்துக் கொடுக்கிறேன்னு சொன்னு!" —"ராமு"

★

### தேடப் போகிறார்!

ஒருவர் பிளாட்பாரம் டிக்கெட்டுடன் பம்பாய் மெயிலில் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். டிக்கட் பரிசோதகர் அவரைப் பார்த்து, "என்ன, ஐயா! சென்டிரல் பிளாட்பாரம் டிக்கட்டை வைத்துக் கொண்டு பிரயாணம் செய்கிறீரே?"

பிர:—பம்பாய்க்குப் போகும் என்னுடைய சிநேகிதர் ஒருவரை பிளாட்பாரம் முழுவதும் தேடியும் காணாததால், அவரை ரயிலில் தேடிக்கொண்டு போகிறேன்.

—என். பாலசுப்பிரமணியன்.

★

### நிற்காத காரணம்

பிரயாணி (போர்ட்டரைப் பார்த்து):—ஏன் ரயில் இந்த ஸ்டேஷனில் நிற்காமலேயே ஓடுகிறது?



போர்ட்டர்:—அந்த ரயில் டிரைவருக்கும் இந்த ஸ்டேஷன் மாஸ்டருக்கும் பேச்சு வார்த்தை கிடையாது!

—"அநாமதேயன்"

# CHAMPION

## SPARK PLUGS






**MORE VITAL**
*and*
**DEPENDABLE**
**THAN EVER**

Factories,
Feltham, Eng.
Windsor, Can.
Toledo, USA.

*to Save Gasoline*

KEEP YOUR SPARK PLUGS CLEAN

84

சென்னை ராஜதானிக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள் ;

## ராணி (மதராஸ்) லிமிடெட்.

மவுண்ட் ரோடு :: மதராஸ்

தந்தி : "AUTOWORKS" டெலிபோன் : 3595

பிராஞ்சுகள்

பெங்களூர் ஸிடி :: திருச்சூர்



## நல்ல உயர்ந்த பண்டங்களையே விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நம்மில் எல்லோரும் மேன்மையான பண்டங்களையே விரும்புகிறோம். சிகரெட்டில் சிறந்த புகையிலையை உபயோகித்தால்தான் அது விரும்பிப் பலராலும் சிறந்ததென்று சொல்லப்படும். டிலக்ஸ் டெனர் சிகரெட் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. பலரும் வாங்கி ஆனந்தமாக அனுபவிக்கலாம். உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலைகளாலேதான் டிலக்ஸ் டெனர் சிகரெட்டுகள் செய்யப்படுகின்றன.

**டி லக்ஸ் டெனர் சிகரெட்டு**

**ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்**

# tenor

**Is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD. LONDON.




## எமது நன்றி

எமது மதுரை தேவி பால விநோத சங்கீத சபையின் 12-ம் ஆண்டு நிறைவு விழாவுக்கு ஆசி கூறி வாழ்த்து அனுப்பிய அன்பர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த வந்தனம்.

அன்பர்கள் பலரது விலாசம் எமக்குச் சரிவர தெரியாதிருந்ததால் பத்திரிகையின் மூலமாக அறிவித்திருந்தோம். அப்படியிருந்தும் எம் மீது அளவற்ற அன்பு கொண்டு எம்மை கெளரவித்து வாழ்த்து அனுப்பியிருந்த அனைவருக்கும் எங்களுடைய இதய பூர்வமாக வணக்கம்.

இதுவரையிலும் எமது தேவி சபையின் வளர்ச்சியிலும் அபிவிருத்தியிலும் சிரத்தை காட்டி எம்மை ஆசீர்வதித்து வந்த அன்பர்கள் அனைவரும் இனி வரும் ஆண்டுகளிலும் இதுபோலவே ஆதரவு காட்டி ஆசிதரப் பிரார்த்திக்கிறோம்.

## மதுரை தேவி பால விநோத சங்கீத சபா

உரிமையாளர்:

நவாப் T. S. ராஜமாணிக்கம்

---

## திருவனந்தபுரம் சித்ரா தியேட்டரில்

# ஐயப்பன்

நாடகம்

8-வது வாரமாக பிரதி தினமும் நடைபெற்று வருகிறது!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.